
பெரிய எழுத்து
மின்னொளியாள்
குறம்
விலை அணா
B.R.N. & SONS
MADRAS.

புகழேந்திப் புலவர் இயற்றிய

பெரிய எழுத்து

# மின்னொளியாள் குறம்




B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

இதன் விலை] 1952. [ரூபா 1.

உ

கடவுள் துணை

# மின்னொளியாள் குறம்

---

### விநாயகர் தோத்திரம்

ஐந்துகரத்தோனே அருள்சடையாள்புத்திரனே
ஆனைமுகப்பிள்ளையாரே அறுமுகர்க்குமூத்தோரே
வேறுவினைவாராமல் விநாயகரேமுன்னடவீர்
ஆதிசிவன்தன்மகனே ஆயன்மருகோனே
பேழைவயிற்றோனே பெருமாள்மருகோனே
முன்னடக்கும்பிள்ளையார்க்கு கண்ணடக்கம்பொன்னாலே
கண்ணடக்கம்பொன்னாலே காற்சிலம்புமுத்தாலே
முத்தானதண்டைகொஞ்ச முன்னடவும்பிள்ளையாரே
பாட்டுக்குகந்தருளும் பார்வதியாள்புத்திரனே
ஆலடியிற்பிள்ளையாரே ஐந்துகரத்தோனே
மூலமுதலேநீர் முன்னடக்கவேண்டுமையா

### சரஸ்வதி தோத்திரம்

தாயேசரஸ்வதியே சதுர்முகனார்தேவியரே
சரஸ்வதியேவாணியரே தாயேவரங்கொடுப்பாய்
என்னாவிலேநீயிருந்து நல்லோசையருள்புரிவாய்
ஏடுதவறாமல் எழுத்தாணிசாயாமல்
தப்பிதங்கள்வாராமல் சரஸ்வதியேமுன்னடவாய்

### கதையின் வரலாறு

பட்டணமாம்பட்டணமாம் இந்திராபுரிபட்டணமாம்
பட்டணத்தையாளுகிற பஞ்சவர்களைவருண்டு
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அரசாளும்நாளையிலே
வில்வாங்கும்அர்ச்சுனனார் விசையனிடதேவியர்கள்
அர்ச்சுனனார்தேவியர் ஐந்திரண்டுயேழுபேராம் [யாள்
பாஞ்சாலன்பெற்றபெண்ணும்பைங்கிளியாள்துரோபதை
நாகராசன்பெற்றபெண்ணும் நாககன்னிமாது
சித்தாயன்தங்கையவள் சுபத்திரைநாயகியாள் [மாள்
பாண்டியர்கள்பெற்றபெண்ணும் பைங்கிளியாளல்லியம்

மேகராசன்பெற்றபெண்ணும்மெல்லியந்தமின்னொளியு
அகஸ்தியனூர்பெற்றபெண்ணும்அன்பானபோகவதி [ம்
சேராம்புராசன்பெற்ற செல்வதியாள்பவளக்கொடி
எழுலட்சம்பெண்டுகளாம் அவர்களுக்குதாதியர்கள்
ஆண்டிருக்குநாளையிலே அர்ச்சுனராசதுரை
ஒற்றைவொருநாளில் உத்தமனும்அர்ச்சுனனூர்
தருமர்தம்பியருச்சுனன் தனஞ்செயனுந்தானெழுந்து
முழுகிக்குளித்து முன்மயிரைபின்போட்டு
பூசைமுடித்தானே பொற்பூசைதான்போட்டு
ஆடையுமாபரணம் அலங்கிர்தஞ்செய்துக்கொண்டு
மல்லிகைப்பூமாலையது மார்பில்பிரண்டாட
கொற்றம்பூமன்னனுக்கு கொண்டையிலேபூவுதிர
பொன்னிழைத்தபட்டாடை பூமியில்புரண்டாட
சாந்தால்மிதியடியாம் சந்தனத்தால்மேற்குமிழாம்
முத்தால்மிதியடியாம் மேலானரத்தினமாம்
பூவால்மிதியடியைப் போட்டுநடந்தாரே
கோட்டைகடந்தாரே கொத்தளமுந்தான்கடந்தார்
தெத்துத்தெருகடந்தார் தோரோடும்வீதிவிட்டார்
மாளிகைகடந்தாரே மன்னரிடவீதிவிட்டார்
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டார்
தெத்தடிப்பெண்களெல்லாம்தேரடிப்பெண்களெல்லாம்
ஆலஞ்சுழற்றுவார்கள் அப்புறத்தேவிட்டெறிவார்
திருஷ்டிகழித்திடுவார் திசைநான்கும்விட்டெறிவார்
கன்னிமார்பெண்களெல்லாம் கண்டாசைப்பெற்றூர்கள்
பட்டணத்துப்பெண்களெல்லாம் பார்த்தாசைப்பெற்றூர்
ஆகாயகன்னியர்கள் ஆசைகொண்டுநின்றூர்கள் [கள்
என்னென்றுகேளாமல் ஏரமுகம்பாராமல்
மின்னொளியாள்கோவிலுக்கு விருப்பமுடன்வாரூராம்
மின்னொளியாள்செய்கிற விவரங்கள்சொல்லுகிறேன்
அன்னநடைமின்னொளியாள் அரிவையருந்தானெழுந்
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து [து
முழுகிக்குளித்தலவோ முன்மயிரைபின்போட்டு
கோதிமயிராற்றி கோடாலிமுடிபோட்டு
ஈரத்துயிலுடனே எழுந்தாளேமின்னொளியாள்
ஆசாரவாசலிலே அன்னநடைதாதியர்கள்
பூசைக்கிடம்வைத்தார் பொற்கொடியாள்வந்துநின்று

வட்டமணேமேலே வந்தமர்ந்துமின்னொளியும்
அரகராவென்றல்லோ அணிந்தாளேவெண்ணீறு
சிவசிவாவென்றல்லோ திருநீறுதானணிந்து
பண்ணேப்பூபோட்டு பகவானேபூசைசெய்து
புன்னேமலரெடுத்து பெருமாளேபூசைசெய்து
கண்ணிரண்டுமூடியல்லோ கர்த்தன்மேல் நினேவானுள்
ஆதிசிவனேநோக்கி அரும்பூசைசெய்திருந்தாள்
அந்தச்சமயத்தில் அருச்சுனரும்வாருரே
மின்னொளிகோட்டைதேடி விசையரும்வாருரே
பத்துகட்டுஅரண்மனேயும் பார்த்திபன்தான்கடந்து
ஆசாரவாசல்தேடி அருச்சுனரும்வாருரே
மின்னற்கொடியாள் மெல்லிநல்லாள்பூசையிலே
சித்திரப்பதுமையைப்போல் செல்வதியாள் நிற்கிறதை
காண்டீபனருச்சுனரும் கண்டாரேகன்னியரை
சூரியனேப்போலேயல்லோ துலங்குகிருள்கன்னியரும்
உற்றுற்றுப்பார்த்தானே ஒளிபிறந்தகண்ணுலே
கண்ணுலேபார்க்கையிலே காமரூபனர்ச்சுனற்கு
மன்மதனெய்தகணே மார்புருகிப்போகிறதாம்
சித்தசன்விட்டகணே சிறுமார்புருகிறதாம்
ஆறுகுருபாணமது மார்புருகிப்போகிறதாம்
ஆணுலழகுமன்னன் அருச்சுனவீரியரும்
அவள்-பக்கத்தில்வந்துநின்று பார்த்திபனருச்சுனரும்
நின்ருனரைநாழி நினேத்தானேகோடியுத்தி
பொறுத்துமுடிவதில்லே பொங்குதுதேகமெல்லாம்
ஏண்டிபெண்ணேமின்னொளியே இந்நேரம்நிற்பேனே
ஆசையெல்லாமுன்மேல் அலேயுதேயென்னசெய்வேன்
என்னிலும்பூசையென்ன ஏந்திழையேயுந்தனுக்கு
பத்தாநானிருக்கையிலே பரமன்பூசையுனக்கேண்டி
என்று-தாவியணேந்து சரசங்கள்செய்யலுற்ருன்
அப்போகோபம்பெருகிக் கொம்பனேயுந்தான்சீறி
மதிப்பற்றுபோச்சுதோதான் வாள்விசையாயுந்தனுக்கு
நான்-அர்ச்சனேசெய்து அரனே நினேந்துருகி
பூசையில்தானிருக்கப் போர்விஜயாயுந்தனுக்கு
புத்தியில்லாமற்போச்சோ போர்விஜயாயுந்தனுக்கு
அப்படிக்கொற்ற அருச்சுனனே நீயெனக்கு
ஏதுக்குதவியென்று இனிவேண்டாமுன்னுசை

வேண்டாமென்றுசொல்லி விருதெடுத்துவூதிவைத்தாள்
ஆகாதவனென்று அருச்சுனனை ஊதிவைத்தாள்
அன்றுமுதலின்றளவும் அர்ச்சுனரும்வாரதில்லை

துரோபதை தன் தாதியிடத்தில் அருச்சுனன்
தேவிகளை விருந்துக் கழைத்து வரச்சொன்னது.

அன்றுமுதலாக அருஞ்சிறையில்தானிருந்தாள்
அப்படியாக அனேகநாட்சென்றபின்பு
மாதொத்தமங்கையர்கள் மயிலனையாள்துரோபதையும்
தோருவடிவழகி துரோபதையுங்கூறிடுவாள்
வாள்விஜயனருச்சுனற்கு மங்கையர்களாயிரமாம்
சொல்லிமுடியாது சுந்தரிமாருயிரம்பேர்
கூறவுங்கூறி முடியாதுகொப்பனைமார்
பாவானமேனிப் பனிபூங்குழலாளும்
பொன்னனமேனிப் புதுப்பெண்மடந்தையரும்
சொர்னவடிவழகியரும் சோழன்மடந்தையரும்
ஆறெங்குமோதும் அகஸ்தியனார்பாவையரும்
அங்கமலர்ப்பூவில் அவதரித்தஅல்லியரும்
சங்குடையாள்தங்கை சுபத்திரைநாயகமும்
பரிவானமங்கையரைப் பார்த்தந்தப்பாஞ்சாலி
சிறுசோறமுதுண்ணத் தேன்மொழிமாரெல்லவரும்
தோருவடிவழகி துரோபதைநாயகியும்
தனக்குகவரியிடும் தாதிமுகம்நோக்கி
முத்தின்கவரியிடும் முகப்பின்முகம்நோக்கி
அந்த-ஆணுலமுகுமன்னன் அருச்சுனர்தேவிகளை
அத்தனைபேரையும் அழைத்தோடிவாருமென்றாள்
அப்படியேயென்னுச்சி அழைத்தோடிவருவேனென்று
ஆரிழையாந்தாதி அதிவேகமாய்நடந்து
சித்திரவீதி தெருவும்பலகடந்து
தேரோடும்வீதி தெருவும்பலகடந்து
முத்தணிந்தவாசல் முகப்பிலேபோய்நின்று
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகத்தை
தாமக்குழலாளுந் தாதிபோய்தெண்டனிட்டாள்
வைகைவளநாடி மாதவம்போய்நடந்து
நீ-ஆருடையதாதி அறியவுரையுமென்றார்
நான்-ஆருடையதாதியல்ல அடியேன்திருப்பணிதான்

தென்மதுரையாளுகிற தேன்மொழியேவிண்ணப்பம்
அன்னமேகேளீர் அடியேன்வாய்விண்ணப்பம்
எங்கள்தேன்மொழியாள்கோவிலிலே விருந்தமுதுண்ப
அஞ்சலருமும்மை அழைத்துவரச்சொன்னார்கள் [தற்கு

அருச்சுனன்தேவிகள் துரௌபதியிடம் வந்தது

பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
விருந்தமுதென்றுசொல்ல மெல்லியருஞ்சம்மதித்து
அவள்-பச்சைக்கடகம் பவழத்தாலாபரணம்
தங்கத்தினாலே சரப்பளிநேர்மையுடன்
தாளிப்பதக்கமும் சன்னற்பின்னற்றூழ்வடமும்
இசைந்த நல்லபாவாடை இளமாதுளம்பட்டுடுத்தி
மாணிக்கத்தண்டிகை வருகவருகயென்றாள்
வாவென்றுசொல்லவே தண்டிகைகொண்டுவந்தார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கோவிலிலே
மாணிக்கத்தண்டிகைமேல் ஏறியந்தமெல்லியரும்
வந்துபுகுந்தார்கள் மெல்லியர்களெல்லோரும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகியும்
நீராடுமண்டபத்தை சென்றார்கள்நேரிழைமார்
முல்லைய நம்பெடுத்து மெல்லியர்கள்பல்விளக்கி
வாயோடுபல்லும் மதிமுகந்தான்கழுவி
ஆடைகளைந்து ஆபரணந்தான்களைந்து
சிவசங்கராவென்று ஸ்நானமதுசெய்தார்கள்
ஆசாரமண்டபத்தே வந்தாரணியிழைமார்
திமான்குழல்நீண்ட வல்லமடமாதர்
சீவிமயிராற்றி சந்தனம்புகைகொடுத்து
ஒவ்வொருமயிருக்கும் ஒவ்வொருபொன்னிதழும்
மாணிக்கச்சீப்பாலே வாரிமயிர்முடித்து
ஆயிரம்பொன்பெற்ற அணிவயிரந்தான்முடித்து
மருக்கொழுந்துவைத்து முடித்தார்வலமாக
ஆபரணப்பெட்டி அணியிழைமார்தான்திறந்தார்
விலைமதிக்கப்போகாத மெல்லியர்கள்தன்பதக்கம்
பூட்டியலங்கரித்துப் பொற்கைவளநாட்டியர்கள்
மாணிக்கத்தண்டிகையின்மேல் ஏறியந்தமெல்லியரும்
மங்களவீதியிலே வந்தாரேமாதரெல்லாரும் [யரும்
இதில்-விளங்கியசீர்மாதவத்து மின்னொளியாள்மெல்லி

கலங்குமனதுடனே காரிழையாள் நாயகியும்
திலதமணியாள் செஞ்சாந்துபொட்டுமிட்டாள்
கூந்தல்முடியாமல் கொம்பனைமின்னொளியாள்
பலவிதமாக முடித்தந்தமெல்லியரும்
பைங்கிளியாளும் பல்லக்கின்மீதேறி
அந்த-வேல்பொருதுங்கண்ணாளும் வீதிபுறப்பட்டாள்
மின்னொளியாள்தாதியரும் மெத்தமனஸ்தாபமதாய்
ஆச்சிமாரெல்லாம் அனுபோகியாயிருக்க
நம்மிட-ஆச்சிசிறையிருக்க'யார்செய்தபாவமென்றாள்
என்று-எல்லோருங்கூடி வேகமாய்த்தானடந்தார்
கவியர்கவிபாட கட்டியர்களார்ப்பறிக்க
கீதமெடுத்துரைக்கக் கின்னரிகள்மீட்டுவர
மேளம்புடைசூழ வீராணந்தான்முழங்க
பட்டுக்குடைகள் பவழநெடுங்குடைகள்
முத்துக்குடைகள் முழுமாணிக்கப்பொற்குடைகள்
சங்கீதவெண்பரிசை யெங்குமுழங்கிவர
மாரிப்பிரம்படிக்க மண்டபம்சென்றேறினாள்
அன்னமூந்தாருவும் தன்னிற்பசுங்கிளியும்
கொம்பிற்பழுத்திருக்குங் கோதுபடாமாங்கனிபோல்
வில்விஜயன்தேவியர்கள் மெல்லிமார்வந்தார்கள்
ஒன்றோடேஒன்று உறவணைந்துமெல்லியர்கள்
தோராவடிவழகி துரோபதையாள்தன்னடிக்கே
தேவிதிருவடிக்கே தெண்டிதெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை மாமியார்தானெடுத்து
வாள்வீர்வளர்ந்திருப்பீர் மங்கிலியமீடேற
வாள்விஜயன்தன்னோடே மாறாமல்வாழ்ந்திருப்பீர்
என்றுதான்வாழ்த்தியே யேலங்கருங்குழலும்
தனக்குக்கவரியிடுந் தாதிமுகம்நோக்கி
மாணிக்கச்சிம்மாதனம் மங்கையற்குசோடியென்றாள்
மற்றுமொருபெண்களுக்கு வட்டமனைபோடுமென்றாள்
அந்த-வட்டமணைமேலே மங்கையர்கள்வீற்றிருந்தார்
சிங்காதனமேறித் தேன்மொழிமார்வீற்றிருந்தார்
அப்போ-தோராவடிவழகி துரோபதையுங்கூறுவாள்
அழகியபூங்கொம்பனையாள் அல்லியரைத்தான்பார்த்து
வெல்லவல்லாள்வெட்டவல்லாள் வீரவாளெடுக்கவல்லாள் [ள்
செருக்களங்கள்தான்புகுந்து சேவகமும்பண்ணவல்லா

மாணிக்கவாளெடுத்து மான்வேட்டையாடவல்லாள்
ஆரமுலையாள் அம்மானையாடவல்லாள்
நாயகியேயுன்னுட்டம் நான்பார்க்கவேணுமென்ருள்
அப்போ-தனக்குக்கவரியிடுந் தாதிமுகம்நோக்கி
அம்மானைப்பந்துகொண்டு ஆரணங்கேவாருமென்ருள்
தங்கப்பொன்னம்மானை தாதிகள்கொண்டுவந்தார்
ஆணிமுத்தம்மானை அடைவுடனேகொண்டுவந்தார்
பாரித்தஅம்மானை பாஞ்சாலிகைகொடுத்தார்

அருச்சுனன் தேவிகள் அம்மானையாடினது

பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்பார்த்து
ஆரமுலையாளும் அம்மானைதான்வாங்கி
அவள்-மார்பில்சரப்பளி மங்கையர்க்குத்தானசைய
குங்குமங்கள்தானெழுக கொம்பனையாளல்லியரும்
அங்கயற்கண்ணம்மையர் அவள்பாடியாடியே
பிட்டுக்குமண்சுமந்து பிரம்பாலடிபட்டதுவும்
தக்கன்தலையறுத்து தான் நஞ்சையுண்டதுவும்
விறகுசுமந்ததுவும் வேடனெச்சிலதின்றதுவும்
நரியைப்பரியாக்கி நல்லபதமீந்ததுவும்
அந்தப்புகழ்பாடி அம்மானையாடினள்
அப்போ-தோராவடிவழகிதுரோபதையுந்தான்பார்த்து
ஆரமுலையாளும் அம்மானைதான்வாங்கி
முத்துமுகம்வியர்க்க விழிகள்சிவப்பேற
சாய்ந்ததாழ்வடங்கள் சன்னல்பின்னலற்றுவிழ
கன்னிதுயிலெடுத்துக் கானகத்தில்சென்றதுவும்
ஆழிகடலிலே அமர்ந்துபள்ளிகொண்டதுவும்
அந்தவளம்பாடி ஆடினளம்மானை
நற்சாந்திளமுலையாள் நாககன்னித்தான்வாங்கி
சுற்றெங்கும்மாணிக்கம் சூழ்மதிலுமாணிக்கம்
கும்பத்தரையைக் குவிப்பதுமாணிக்கம்
அந்தப்புகழ்பாடி ஆடினளம்மானை
அந்த-விளங்கியசீர்மாதவத்துமின்னொளியாள்கைகொடு
அம்மானையாடாள் பள்ளாங்குழியாடாள் [த்தார்
பந்துபலவாடாள் பைங்கொடியும்மின்னொளியாள்
சிந்துபலவாடாள் சீரானமின்னொளியாள்
ஆரணங்குமாது அகஸ்தியனைதான்வாங்கி

ஆரமுலேயாளும் அம்மானுர்தான்வாங்கி
சந்திரனுஞ்சூரியனும் தானுரைத்தபாவனேபோல்
பரந்தமுகங்களும் பார்வேந்தர்தீர்த்தங்களும்
அந்தப்புகழ்பாடி ஆடினுளம்மானுர்
சோரவளநங்கை சுபத்திரையாள்தான்வாங்கி
உமையாள்தனக்கு ஒருபாகமீந்ததுவும்
திங்களிளம்பிறையைச் சிரசில்தரித்ததுவும்
பொங்கவரம்பூண்டு புலித்தோலுடுத்தினது
சிவசங்கராவென்று தையலருமாடினுள்
மற்றுமுள்ளமங்கையர்கள் வாங்கியப்போ அம்மானுர்
ஆடினுர்தங்களிட ஆபரணஞ்சோதிமின்ன
பாடினுர்தங்களிட பஞ்சவர்ணகிளிபோலே
கோலங்களாட குழைகளசைந்தாட
கொத்துஸ்தனங்கள்ரெண்டுங் குலுங்கக்குழவியர்கள்
கன்னியர்கள்ஸ்தனங்கள்ரெண்டுங் கனக்கவேவிம்மிட
அன்னநடைமாதரெல்லாம் ஆடினுரம்மானுர் [வே
அம்மானுராடி அணியிழைமார்வீற்றிருந்தார்
அந்த-தோராவடிவழகி துரோபதைநாயகியும்
தனக்குக்கவரியிடும் தாதிமுகம்நோக்கி
அடிசில்சமையுமென்ருள் ஆனந்தவாழ்மாரி

தாதிகள் சமையல் செய்தது

அந்நமொழிகேட்டு ஆரணங்குதாதியர்கள்
அடிசில்சமைக்கவென்று அல்லவருந்தாமெழுந்து
அடுப்புமெழுகுவார்கள் அட்சதைக்காப்பிடுவார்
எங்குமலங்கரித்து எத்திசையும்நீர்தெளித்து
பானேகழுவி பன்னீருலேவார்த்து
பாலுலேவார்த்து பண்பானமேல்மூடியிட்டு
வடகடலில்முத்தை வாரியெடுத்தாற்போல்
தென்கடலில்முத்தை திரட்டியெடுத்தாற்போல்
சன்னசம்பாதன்னரிசி தீட்டியுலேயிலிட்டார்
அரிசியலம்பி அமுதுசமைத்தார்கள்
செம்பொன்அருவாமனே தீட்டிப்பதப்படுத்தி
வாழைக்காய்கொய்வார்கள் வழுதலங்காய்காம்பரிவார்
ஈழப்பலாக்காயை இளமுள்ளுபோக்கடிப்பார்
கனிக்கிறமாங்காயும் கருணேக்கிழங்கெடுத்து

பொற்பதமாகவே பொரிக்கறிக்குத்தானறிவார்
நந்தியென்னும்பூசனிக்காய் நான்காய்ப்பகுந்திடுவார்
கோதையர்கள்பூசனிக்காய் கொய்வார்குழம்பிடுவார்
பாவற்காய்கொய்வாரும் பயிற்றியங்காய் நாருரிப்பார்
பொரிக்கரிக்காகவே புடலங்காய்கொய்திடுவார்
வாழைக்காய்வாழைத்தண்டு வாழைப்பூவாழைக்கூட்
அவரைக்காய்பீர்க்கங்காய் ஆய்வார்அரிந்திடுவார் [டை
செம்பொன்னின்அம்மியை தென்கிழக்காய்தான் திருப்பி
சாம்பாரங்கூட்டுவர்க்கம் தானரைத்துவைப்பார்கள்
பத்துவகைக்கறியும் பதினெட்டுபச்சடியும்
நல்லபொறிக்கறியும் இருசாக்கள்போசனமும்
வடகம்பொடிபோட்டு மணிசீரகம்போட்டு
காருவிநெய்வார்த்து கறிவேப்பிலைபோட்டு
தாளித்துஇறக்கினர் சகலபதார்த்தங்களை
மணங்கள்குமுகுமென்ன மாதர்கள்புறைக்கேற
செம்பொன்பிரியணைமேல் சேரஇறக்கிடுவார்
காய்ச்சியபாலும் கச்சாயமுப்பழமும்
அடிசில்சமைத்துவைத்து அன்னநடைமாதரெல்லாம்
அடிசில்சமைத்ததென்று அருஞ்சின்னமூதிவைத்தாள்
ஊதினசின்னத் தொனிகேட்டுஉத்தமியாள்
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
மூத்துமிதியடியைத் தொட்டுநடந்தசைந்து
அருச்சுனனர்தேவியர்கள் அவர்களிடத்தில்வந்து
தோருவடிவழகி துரோபதையுங்கூறுவாள்
மெத்தப்பசியோடே மெல்லியரேயிருந்தீர்கள்
போசனமுண்ணுதற்குப் போதவெழுந்தருள்வாய்

## அருச்சுனன் தேவிகள் போசனமுண்ணது.

என்றதுகேட்டு எழுந்தார்களெல்லவரும்
அருச்சுனனர்தேவியர்கள் அனைவருந்தானெழுந்தார்
கொம்பனைகளெல்லாங் கூடியொன்றாய்கைகொடுத்து
தேன்மொழிமாதரெல்லாம் சிரித்துவிளையாடி
ஆரணங்குமாதரெல்லாம் அரண்மனையிற்போய்புகுந்து
கட்டியசைந்து திலங்கும்வளைகுலுங்க
வாசங்கள்மிஞ்சும் மலர்க்குழலில்பூவுதிர
காலோடுங்கையும் கனிவாயுங்கொப்பளித்து

வாயோடுபல்லும் மதிமுகமுஞ்சுத்திசெய்து
ஆரவிளமுலையாள் அரண்மனையிற்போய்புகுந்தார்
தாமக்கருங்குழலார் தாதிகளோடிவந்து
மங்கையர்கள்தானிருக்க வட்டமணைபோட்டார்கள்
பாவையர்கள்தான்வரவே பஞ்சவர்னப்பாய்போட்டார்
இருவர்க்கொருதண்டிகையும் வைத்தாரிளங்கொடியும்
தலைவாழையிலைபோட்டு தண்ணீர்தெளித்தார்கள்
மல்லிகைமொக்குபோல் மாற்றுவெள்ளிநிறம்போலே
தும்பைமலர்போலே சொரிந்தார்கள்போசனத்தை
பொன்போல்பருப்பைவைத்து புத்துருக்குநெய்சொரிந் [தார்
ஆசைப்படைச்சலுடன் அன்பானபோசனமும்
எடுத்துப்படைத்தார்கள் இளங்கொடிமாதருக்கு
போசனங்களுண்டார்கள் பொற்கொடிமாதரெல்லாம்
காய்ச்சியபாலும் கனிவர்க்கமுப்பழமும்
வடைதோசைபாயசம் வகையறவேயுண்டார்கள்
போசனங்களுண்டவர்கள் பொடியிட்டுக்கைதிமிறி
கனிவாயுங்கொப்பளித்து கைகாலுஞ்சுத்திசெய்து
அலங்காரமண்டபத்தில் அனைவரும்வந்தார்கள்
அப்போதுமின்னொளியாள் ஆனருசியுண்டறியாள்
எல்லாரும்போலே எழுந்துவந்துதான்காத்தாள்
தங்கத்தாம்பாளத்தில் தாம்பூலந்தானெடுத்து
கச்சாக்களிப்பாக்கு கம்மாறுவெற்றிலையும்
மோரங்கிப்பாக்கு மூத்துசுட்டசுண்ணும்பும்
பந்நீருஞ்சந்தனமும் பரிமளமும்பூமலரும்
தாதிகள்கொண்டுவந்துதையலர்மார்முன்னேவைத்தார்
அன்னநடைதுரோபதையாள் அள்ளிக்கொடுத்தாளே
தாம்பூலந்தான்வாங்கி சந்தோஷமானார்கள்

அருச்சுனன் தேவியர்கள் அவரவர்கள்
அரண்மனை சென்றது.

அத்தண்டபெண்களும் அனைவோருந்தானெழுந்தார்
அவரவர்கள்தோழிகளும் அவரவர்கள்பாங்கிகளும்
அனலிற்பிறந்தாட்கும் அல்லிப்பெருமாட்கும்
போய்வாரோமென்றுபொன்னடிக்கீழ்தெண்டனிட்டார்
இருவருக்குந்தெண்டனிட்டு ஏறினார்தண்டிகைமேல்
விடைபெற்றுப்பெண்கள்வெளிப்பட்டார்மாதரெல்லாம்

மின்னேரிடையாளும் மூகங்கருகிறாள்படிந்து
கோதிமுடியாத கூந்தல்சடைப்பற்றினதால்
ஏங்கிமனந்தளர்ந்து யேறினள்தண்டிகைமேல்
அவரவர்மாளிகைக்கு அனைவோரும்போய்ச்சேர்ந்தார்

### அல்லியும் துரோபதியும் ஆலோசனை செய்தது

அனைவரும்போனபின்பு அல்லிமலர்நாயகியும்
தோருவடிவழகி துரொபதையாள்தன்னுடனே
இருவருமாக யேகாந்தமாயிருக்க
துரேளபதையைத்தான்பார்த்து சொல்லுகிறாளல்லியம்
அனலிற்பிறந்தவளே ஆச்சியரே நீர்கேளும் [மாள்
என்மனதிற்கவலையொன்று யிருக்கிறதுவடிவுடையே
பொறுக்கமுடியவில்லை பொற்றணலிற்பிறந்தவளே
சொல்லவிடைகொடுத்தால் சொல்லுகிறேனச்சியரே
திருவாய்மலர்ந்தருளி திருவுளம்பற்றினால்
மனதில்நினைத்தவரம் மயிலனையேசொல்லுகிறேன்
உத்தரவோவென்றாள் உலகத்தையாண்டகன்னி
என்றதுகேட்டு ஏதுசொல்வாள்துரௌபதையும்
ஆறுயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
மாள்கிறேமென்றுசொல்லி மலைமேல்தவமிருந்தார்
மாளாதேயென்று மலரிலவதரித்தாய்
வீரானசெங்கோலும் மெல்லியரே நீசெலுத்த
மன்னன்விசையனவர் மருவுகின்றமாதேவி
பொன்னணிந்தமார்பன் புலந்திரனைப்பெற்றவளே
வம்பலர்ந்தகோவே வடிவுசூடாமணியே
அம்பலர்ந்தபெண்ணே அருக்காணிபெண்மயிலே
மணம்பொருந்துஞ்சிருலகில் மற்றொருவரில்லாதே
வந்திருந்துவாளெடுத்து வையகத்தையாண்டவளே
தன்பெயருஞ்செல்வம் தையலுடையவளே
உன்பெயருக்கொப்பானர் உலகத்தில்யாருமில்லை
மங்களமுகமுங் கனிமுறுவல்செவ்வாயும்
திலர்தமிடுதலும் செங்கரும்புபோல்விழியும்
உன்னழகுக்கொப்பானர் வுலகுதனில்யாருமில்லை
ஒத்தனைந்துபுல்கி ஒளிமுகத்தைமுத்தமிட்டு
கட்டழகிநீநினைத்த காரியத்தைசொல்லுமென்றாள்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுவாள்

அருச்சுனனுர்தேவிமார் ஆரணங்குமாதர்களில்
வாள்விஜயன்தேவிமார் மங்கையர்கள்பெண்களிலே
நம்முடனேயொத்ததொரு நாயகியார்சக்களத்தி
அனைவரும்வாழ்ந்து அதிகசுகமாயிருக்க
அதிலேயொருத்தி அதிகதுக்கமாவதென்ன
வாழாதபெண்ணுகி மடந்தைசிறைகாப்பதென்ன
புருஷனைப்பறிகொடுத்தார் பெருஞ்சிறைகாப்பார்கள்
புருஷனிருக்கையிலே பெருஞ்சிறைகாப்பதென்ன
கணவனைப்பறிகொடுத்தார் கைம்பெண்டாயிருப்பார்கள்
கணவனிருக்கையிலே கைம்பெண்டாயிருப்பதென்ன
மஞ்சளிழந்து மணமிழந்துபோவானேன்
இப்படிக்குமுண்டோ யிரக்கமுள்ள ஆச்சியரே
காவேரிநாடன் கட்டழகன்பயின்றெடுத்த
விளங்கியசீர்மாதவத்து மின்னொளியாள்மெல்லிநல்லா
மாதரிளங்கொடியாள் வாழாதிருப்பதென்ன [ள்
குடியில்பெண்வாழாமல் கொம்பனேயேயிருந்தாலும்
மாலையிட்டகன்னியவள் மனஞ்சலித்தாளாமாகில்
பழுதல்லோதன்குடிக்கு பாஞ்சாலன்சீர்மகளே
முந்தாணிதான்போட்டு முடக்கினல்தோஷமல்லோ
நாயகிசுபத்திரைக்கு நாலுமுறையாவானேன்
சுவாமியுடதங்கை சுபத்திரையாள்தன்முறையை [ளிக்கு
அதை-பாதிபகுந்தளிப்போம் பைங்கிளியாள்மின்னொ
உந்தன்திருவுளத்துக் கொக்குமோ ஆச்சியென்ருள்
தோருவடிவழகி துரோபதையாள்தான்கேட்டு
என்மனதிலெண்ணினதுபோல யிருந்ததேயுன்மனதில்
ஆனபடியால்சீமை ஆள்வதும்வெல்வதும்
உந்தனிடபுத்திக்கு வொப்பானுரொருவரில்லை
மற்றொருவர்தந்தமக்கு மதிவருமோதங்கையரே
ஆச்சியரேபெண்பெருமா ளருச்சுனனுர்செய்தபிழை
என்னென்றுசொல்வே னெழில்விஜயன்செய்தபிழை
அவள்-சிவபூசைவேளையிலே சென்ருராம்தேர்விஜயன்
சரசங்கள்செய்து தையல்கொங்கைதான்பிடித்து [லே
அவள்கையைதான்பிடித்து அழும்புபண்ணுர்வேளையி
அவளறிவழிந்துமெய்சோர்ந்து அவர்முகத்தைதான்பார்த்து
சிவபூசைதான்குலைந்து சிந்தைமுகம்வேறுபட்டு
கோபித்துக்கண்சிவந்து கொம்பனையுங்கூறிவிட்டாள்

மின்னொளிக்குவேண்டாதவேம்பென்றுஊதிவைத்தாள்
காரிழைக்குவேண்டாத கணவனென்றுஊதிவைத்தாள்
ஆகையினாலே அசந்தார்காணருச்சுனரும்
என்றுமிவளுரைக்க ஏந்திழையாளல்லியரும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளல்லியரும்
கரும்பசைத்தேன்சொரியும் சோழன்திருமடந்தை
தாழம்பூவாலே மடைதிறந்துநீர்குடித்து
தாமரைப்பூவாலே மடைதிறந்துபாய்கிறது
சேற்றால்மடைதிறந்தால் செல்வங்குறையுமென்று
பணததால்மடைதிறந்தால் பாசுபிடிக்குமென்று
சோற்றால்மடைதிறக்கும் சோழன்திருமடந்தை
அப்படிக்கொத்த அழகுள்ளநாயகியும்
வாழாதிருக்கவந்த காரியமேனேந்திழையே
ஆரணங்குசிறையிருக்க காரியமேன்வாழ்வரசி
தேனின்குழலாளும் சிறையிருக்கலாகாது
என்றுஉரைத்தாள் ஏந்திழையாளல்லியரும்
அவ்வார்த்தைதான்கேட்டு அனலிற்பிறந்தவளும்
தோகையந்தஅல்லியற்கு துரோபதையுமேதுசொல்வா
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகமே [ள்
மயிலனையாள்மின்னொளியை வாழ்க்கைநிசமானால்
அரண்மனைக்குப்போகாமல் ஆச்சியரேயிங்கிருந்து
பொற்கொடிமாதே பூங்காவனமிருந்து
அருச்சுனரையிங்கே அழைத்துவரச்சொல்லி
அருச்சுனரைக்குறவேடம் ஆகவேதான்போட்டு
குறக்குலத்தில்வாழுகிற குலமாதரைப்போல
மின்னொளியாள்வாசலிலே வேண்டுங்குறிசொன்னால்
வலியஅழைப்பாள் மாதுகருங்குழலும்
மின்னொளியாள்வாசலிலே வேண்டுங்குறிசொன்னால்
இதங்கியந்தமின்னொளியா ளிளவிசையன்சேதிகேட்டா
கூடிசுகப்படுவாள் குறைதீர்ந்துவாழ்ந்திருப்பாள் [ல்
இந்தட்சணத்தி லிப்பொழுதேசெய்வோமென்றாள்
அப்படியேசெய்யுமென்றாள் ஆரணங்குவல்லியரும்

அல்லியரும் திரௌபதையும் அருச்சுனரை
அழைத்துவரச் சொன்னது.

அல்லிப்பெருமாளும் அகங்கார நாயகியாள்
தன்னருகேநின்ற தாதியைத்தானழைத்து

நான்குபேர்தாதிகளை நாயகியாள்தானழைத்து
கூறுவாள்கொம்பனையாள் கொஞ்சுங்கிளிபோல
ஆணலழகுமன்ன னருச்சுனராஜாவை
பரமசிவனிடத்தில் பாசுபதம்பெற்ற
பாசுபதம்பெற்ற பார்த்தரருச்சுனரை
எங்கேயிருந்தாலும் எவ்விடத்திற்சென்றாலும்
சந்தனவடிவழகர் தருமரண்டையிருந்தாலும்
சிங்கக்கொடிபடைத்த ஜெயமுடையவீமரவர்
வெற்றிமதயானை வீமரண்டையிருந்தாலும்
நாமக்கொடியுடைய தருமரண்டையிருந்தாலும்
சாஸ்திரத்தில்வல்லதொரு சகாதேவராஜரண்டை
அங்கேயிருப்பாரே அருச்சுனவீரியரும்
மந்தாரக்குந்தியம்மாள் மாதாவிடமிருந்தாலும்
ஸ்ரீராமர்தங்கையிடம் சேர்ந்துயிருந்தாலும்
விலைமாதர்வீதியிலே வேந்தரிருந்தாலும்
தேவடியாள்வீதியிலே தெருக்களெல்லாமாராய்ந்து
ஆலயங்கடோறும் ஆராய்ந்துபாருமென்றாள்
கண்டதேயுண்டானால் கைப்பிடியாய்த்தான்பிடித்து
ஏதொன்றுஞ்சொல்லாமலழைத்துவாதாதியென்றாள்
நானழைத்தேனென்று நீயழைத்துவாருமென்றாள்
என்றதுசொற்கேட்டு எழுந்தார்கள்தாதியர்கள்
வீசுங்கவரியை மிகவொருத்திகைபிடித்து
நான்குபேர்தாதிமார்கள் நடந்தார்விசையுடனே
அருச்சுனரைத்தேடி அரிவையர்கள்போறார்கள்
வீதிதெருவெங்கும் மெல்லியர்கள்தேடுகிறார்
தருமர்கொலுவிலும் தம்பிமார்வீதியிலும்
வீமர்கொலுவிலும் விலைமாதர்வீதியிலும்
குந்திகொலுவிருக்கும் கொம்பனைமார்வீதியிலும்
ஆலயம்வீதியினும் ஆரிழைமார்வீதியிலும்
எங்கெங்குந்தேடி இனியவிடமாராய்ந்து
ஸ்ரீராமன்தங்கை சிற்றிடையாள்வீதியிலும்
தேடிவருகிறார்கள் தேர்விஜயனருச்சுனனார்
சுபத்திரையாள்வீதியிலே சுந்தரவாழ்மார்பா
முத்தானவாழ்மார்பன் முறையிட்டுத்தானெழுந்து
வாசமுமிழந்து மலர்குழலில்பூவுதிர
கைகாலுஞ்சுத்திபண்ணி கனிவாயுங்கொப்பளித்து

வாயோடுபல்லும் மதிமுகமுஞ்சுத்திபண்ணி
ஆணழகன்வாழ்மார்பில் ஆடைவிரித்துடுத்தி
ஆலகாலவிஷமுண்டா ரருளியவெண்ணீறு
சிவனுடையவெண்ணீறு திருநீற்றுக்காப்பணிந்து
தருமரடிவணங்க தனஞ்செயன்வேண்டுமென்று
அம்புவில்லுங்கைப்பிடித்து ஆனந்தவாழ்மார்பன்
தங்கமிதியடிபோல் தானசைந்துமன்னவனும்
வேந்தர்பெருமாளும் வீதிபுறப்பட்டார்
தோளிலிடும்பச்சைவடம் துப்பட்டிதொங்கிவர
காயாரக்காய்த்ததொரு கமுகினிளம்பாக்கும்
வாயாரத்தின்று வலதுகையில்சுருள்பிடித்து
தென்றற்பெருமாளும் தெருவிலேபுறப்பட்டார்

### தாதியர்கள் அருச்சுனரை யழைத்துவருதல்

கட்டழகிதோழிமார் கண்டார்களருச்சுனரை
விஜயர்க்கெதிராக மெல்லியர்கள்தானடந்து
பார்த்தன்திருவடிக்குப் பாவையர்கள்தானடந்து
வந்துபணிந்தவரை வாழ்மார்பன்கண்ணிற்கண்டு
யார்பணிதாதிநீ அறியவுரையுமென்ருர்
நான்யார்பணியுமல்ல அடியேன்திருப்பணிதான்
தீயிற்பிறந்தவளும் தென்னுடன்பாவையரும்
மலரிற்பிறந்தவளும் வைகைவாழ்நாட்டாளும்
இருவருங்கூடி இனகாவல்வந்திருந்து
மலர்க்காவில்வந்திருந்து வண்டார்க்கருங்குழல்மார்
உம்மை-ஏதோதெரியாது இட்டுவரச்சொன்னார்கள்
பிடித்தபிடியுடனே அழைத்துவாருமென்ருர்கள்
இருவர்பணிதாங்களென்று இரங்கியேதெண்டனிட்டார்

### அருச்சுனன் பூங்காவனம் வந்தது

இருவர்பணியென்ருலுமே எழில்விஜயனுளமகிழ்ந்து
சந்தோஷப்பட்டாரே தாமந்தவாழ்மார்பன்
உள்ளம்குளிர்ந்தாரே உடம்பெங்கும்பூரித்து
சரீரங்குளிர்ந்தாரே சருவாங்கம்பூரித்து
தருமர்கொலுவை தனஞ்செயனுந்தான்மறந்து
வீமர்கொலுவை விஜயனுர்தான்மறந்து
வீதியும்வீதி தெருவும்பலகடந்து

பூங்காவனம்தாண்டி போரானேவாழ்விஜயன்
தூரவருகையிலே !தேன்மொழிமார்கண்டார்கள்
சுந்தரப்பூமுடியை தூரமேகண்டார்கள்
துலங்குமதிமுகமுஞ் சுந்தரப்பேரழகும்
வடிவழகுமொப்பனையும் வாள்மயிலாள்கண்டாளே
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள் நாயகியும்
தோராவடிவழகி துரோபதைக்குயேதுசொல்வாள்
பார்த்திரோவாச்சியரே பார்த்திபன்வடிவழகை
அழித்தழியாச்சந்தனமு மஸ்தகிரிபொட்டழகும்
பிரிந்தபுரிநூலழகும் பொருந்தவிழியழகும்
தோளில்துளசிமாலை தொங்கிவருகிறதும்
பச்சைநிறமும் பவழம்போல்பல்லொளியும்
மொச்சைக்கருங்குழலு முறுவல்கனிவாயும்
மனையவளோட்டிய மஞ்சளதுவணியும்
மஞ்சள்துவணியும் மையற்றவாசங்களும்
காவியங்களோதும் கனிவாயுங்கண்மலரும்
இணையொத்தமங்கையரை இணைகின்றவாழ்மார்பும்
தேவேந்திரன்மகன் செம்பட்டுடையழகும்
கண்டீரோயாச்சியரே கட்டழகன்தனவடிவை
வாழ அதிஷ்டமில்லாள் மின்னேரிடையாளும்
ஏழையென்றமின்னிடையா ளிளங்கொடியாள்வேண்டேனென்றார்
ஸ்ரீராமன்றங்கையவள் செய்தவதஷ்டமிது
மாயவனார்தங்கையவள் வல்லான்மைகண்டீரே
மண்ணளந்தான்தங்கையிட மாயமிதுகண்டீரே
இவர்தோளில்சார்வதற்கு என்னதவஞ்செய்தாளோ
மன்னர்விஜயரது மதிமுகத்தைபார்த்திருந்தாள்
அவ்வளவில்பார்த்திபன் ஆரணங்குமுன்னேவந்தார்
இருளடைந்தசாலையிலே எழுந்திருந்தசூரியன்போல்
நடந்துவந்தாரருச்சுனரும் நான்குதிசைநடுங்க
தீயிற்பிறந்ததொரு தேன்மொழியாளருகில்வந்தார்
அல்லிப்பெருமாளி னருகாகவந்துநின்றார்
பாண்டிப்பெருமாளும் பராமுகமாய்த்தானிருந்தாள்
நாமிவரைப்பார்ந்து நகைத்தோமேயானல்
மிகவுமிலேசாக வீரியத்தைப்பேசிடுவார்
காரியமல்லவென்று கண்சாயலாயிருந்தாள்
பாதச்சிலம்பழகை பார்த்துநகைத்திருந்தாள்

காண்டாவனமெரித்த காளையவர்கண்சிவந்து
கோபித்துகண்சிவந்து கோபாலன்மைத்துனரும்
கச்சுப்புறைதனிலே கைபோட்டான்காவலனும்
பரிசைமேல்கைபோட்டு பாங்குஉறுவினனே
கரணங்கள்போடுகிருன் கைலாகுபோடுகிருன்
முன்கந்துபின்கந்தாய் மூனைவீரன்பாயுகிருன்
கண்டந்ததாதிமார் கடுகியேயோடலுற்ருர்
சூரியனைக்கண்ட பனிபோலவிலகினர்
கண்டாளேயல்லியரும் காற்றசைந்தார்போல்குதித்து
மச்சத்தைவிச்சுளி வந்தொருக்கால்பாய்ந்தார்போல்
வாளுக்கேனென்றுசொல்லி வாழ்பாண்டி நாட்டாளும்
கைவாளைப்பிடிங்கிக்கொண்டுகலுக்கென்று நகைத்தாளே
கண்டீரோ ஆச்சியரே கட்டழகன்சேவகத்தை
பார்த்தீரோ ஆச்சியரே பார்த்திபன்சவுரியத்தை
இன்றேயறிந்தேனே எழில்விஜயன்சவுரியத்தை
அன்றேயறிந்தேனே அர்ச்சுனராண்மைகளை
பாஞ்சாலன்பந்தலிலே பிராமணனைப்போலேவந்து
வில்லைவளைத்ததுவு முடுக்குந்தளுக்குகளும்
முன்னேவரவொட்டாமல் வெட்கியிருந்ததுவும்
எனக்காகவில்வளைத்து எந்தனைமாலையிட்டு
தாளுளமாட்டாமல் சவுரியராஜதுரை
ஐவருக்கும்பெண்ணுகி அமர்த்திவைத்தவண்மைகளை
அன்றேயறிந்தேனே ஆணழகன்சவுரியத்தை
என்று நகைத்தாளே இளங்கொடியாள்துரோபதையும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
அதுவேயல்லாமல் ஆயிரம்பாண்டியர்முன்
அன்றுமொருஆண்டியைப்போ லாணழகன்வடிவெடுத்
கையில்மடல்பிடித்து கண்கெட்டான்போலிருந்தார் [து
அன்றேயறிந்தேனே அருச்சுனர்வீரியத்தை
அன்று நகைத்தாளே ஏலப்பசுங்கிளியும்
அப்போது அர்ச்சுனரும் ஆணழகரேதுசொல்வார்
அன்னமேதேனே அமுதேபசுங்கிளியே
இருவருமாய்நீங்க ளிந்தவனத்தில்வந்து
என்னையழைத்தது ஏதுகருமமடி
ஏதுக்குமாதேநீங்கள் இட்டுவரச்சொன்னீர்கள் [ர்
வரவழைத்தகாரியத்தை வாய்திறந்துசொல்லுமென்ரு

அப்போது அல்லியவள் ஆரணங்குமேதுசொல்வாள்
உன் மச்சினியாள்வாழ்வை பறிக்கவென் றுநினைக்கவில்
சுபத்திரையாள்வாழ்வை பறிக்கவந்தார்யாருமில்லை [லை
கோபங்களேன்காணுங் கொத்துப்போர்வீரியரே
தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
மச்சினியாள்வாழ்வை பறிக்கவந்தோம்வாள்விஜயா
சுபத்திரையாள்வாழ்வை சுகம்பறிக்கவந்தோமோ
அத்தைமகளென்றுசொல்லி ஆதரித்தகன்னியரை
மையல்கொண்டகன்னியரை வாழவிடோம்வாள்விஜயா
செப்பிடுங்காரியத்தை செய்கிறோமென்றுசொன்னால்
கொற்றவனே நீரும் குருவாணையிட்டாக்கால்
அப்போது நாங்க ளூரைப்போங்காணருச்சுனரே
இல்லாமல் நாங்க ளூரையோங்காணழகா
என்றதுகேட்டுமவர் எதுரைப்பாரருச்சுனரும்
தீயிற்பிறந்தவளே தென்னுடன்பாவையரே
அனலிற்பிறந்தவளே ஆரணங்குதுரோபதையே
அல்லியிற்பிறந்தவளே அல்லிமலர் நாயகியே
வையைவளநாட்டாளே வாழ்வரசியல்லியரே
அரிவையரே நீங்க ளருளியகாரியத்தை
மீறிநடந்ததுண்டோ வேல்பொருதுங்கண்ணளே
தருமர்திருவாணை தம்பிமார்தன்னாணை
வீமர்திருவாணை விமலனர்தன்னாணை
குந்தியம்மாள்தன்னாணை குருக்கள்திருவாணை
சங்கவதிதன்னாணை சுவாமியார்தன்னாணை
தென்னாட்டிற்தன்னாணை தீயில்வந்தாள்தன்னாணை
பெருமாள்திருவாணை பிள்ளையுமறிவேனே
பிறவாமூடிதரித்த பெண்பெருமாள் நாயகியும்
ஆணைபெரிதுகண்டீர் அமையுமமையுமென்றுள்
ஆணையிட்டோந்தோஷமில்லைஅர்ச்சுனரேகேளுமென்
கொம்பிலிருந்து குதித்தகிளிபோலே [றுள்
அன்னம்போல்வாய்திறந்து ஆரணங்குமேதுசொல்வா
எங்களோடொத்த ஏந்திழையாள்பொற்பாவை [ள்
காவேரிநாடன் பயின்றெடுத்தகட்டழகி
விளங்கியசீர்மாதவத்து மின்னிடைமெல்லி நல்லாள்
அணியிழையாள்வாழா திருப்பதென்ன ஆணழகா
குடியில்பெண்வாழாதே கொற்றவரேயிருந்தாலும்

முந்தாணிபோட்டு முடங்கினுளானலே
பழிப்பல்லோதன் குடிக்கு பார்த்தர்பெருமானே
அதையெண்ணிநாங்களும்மை யழைத்தோங்காணுணழ
காண்டாவனமெரித்த காளையவரேதுசொல்வார் [கா
என்னலேவாழா திருந்தாளோவந்திழையாள்
தன்னலேவந்த வசமல்லோதையலற்கு
வாயாலேயல்லோ வாழ்விழந்தாள்மின்னிடையாள்
தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
குடியாள்சிறையிருந்தால் குற்றங்கள்வந்துவிடும்
மாதுசிறையிருக்க மன்னவனேயாகாது
காண்டாவனமெரித்த காளையவர்கூறுவார்
பொற்கொடியாள்கோயிலுக்கு போகாதநேரமுண்டோ
மின்னொளிக்குவேண்டாத கணவனென்றுஊதிவைத்தாள்
காரிழைக்குவேண்டாத கணவனென்றுஊதிவைத்தாள்
ஊதிவைத்தாள்கோயிலுக்கு உத்தமியேநான்போகேன்
மணமாலைசூட்டலையோ மண்டலங்கள்தானறிய
மதியாமல் ஊதிவைத்தாள் வையகங்கள்தானறிய
இதுவொருகாரியம்போல் என்னையிங்கேவரவழைத்து
ஆணையிடவைத்தது அரிவையரேகாரியமேன்
என்றுமிகச்சீறி எழுந்திருந்தாரருச்சுனரும்
சீறியெறிபறந்து சிங்கக்குட்டிபோலெழுந்தான்
தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
விஜயரைகையமர்த்தி மெல்லியவளேதுரைப்பாள்
ஆதிசிவன்பூசையிலே அருச்சுனரேசென்றீரோ
சங்கரனர்பூசையிலே போய்சென்றுதார்வேந்தா
பூசைசெய்யும்வேளையிலே போயவளையகந்தைசெய்து
வாடியென்றுபோடியென்றும் வம்புசெய்யநியாயமுண்
அதனலேமின்னிடையும் ஆகாதவம்பனென்ருள் [டா
மங்கைமாரெல்லவரு மாளிகைக்குவந்தார்கள்
தட்டிலேபாக்கும் தனிக்கையிலேவெற்றிலையும்
அள்ளியளித்தேன்யான் ஆரணங்குபாவையற்கு
விளங்கியசீர்மாதவத்து மின்னொளியுந்தண்டேனென்ரு
வடிவழகிமேனியிலே மஞ்சளும்பூசாமல் [ள்
அஞ்சனமுந்தீண்டாதே அலர்தாமரைக்கண்ணுள்
பவளச்செவ்வாயில் பாக்குதரிக்காமல்
சலவையுடுக்காமல் சந்தனங்கள்பூசாமல்

மன துகலங்கியே வந்திருந்தாள்சபை நடுவே
இது-ஆகாதுகாணும் அரசர்பெருமாளே
பழுதுகள்வந்திடுமோ பார்த்திபராஜாவே
எண்ணறக்கற்றும் எழுத்தறப்படித்தாலும்
பெண்மதியாலல்லவோ பிழைமோசமாகிறது
பெண்ணின்பிழையை பொறுத்தவர்புண்ணியர்காண்
பெண்சாதிசெய்தகுற்றம் பெரிதென்றுபார்ப்பாரோ
எங்களைப்பற்றி இளவிஜயாபோய்வாரும்
கூடியணைந்து குறைதீர்த்துவாருமையா
அவள்சிறையைத்தீர்த்து ஆணழகாவாருமென்றார்
காண்டாவனமெரித்த காளையவரேதுசொல்வார்
உங்களிடசொற்படிக்கு வுத்தமியே நாடிசென்றால்
மாதரிடகோட்டையிலே வலிய நான்போனக்கால்
இன்னமொருதரம் வம்பனென்றாலென்னசெய்வேன்
ஆகாதவம்பனென்றால் ஆரணங்கேயேதுசெய்வேன்
நான்போவதில்லையென்று நகைத்தவருங்கூறினர்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுசொல்வாள்
கண்டீரோ ஆச்சியரே கட்டழகன்தருக்கத்தை
பார்த்தீரோ ஆச்சியரே பார்த்திபன்தருக்கத்தை
இன்றேயறிந்தேனே எழில்விஜயன்தருக்கத்தை
ஆறாயிரவர் அடிவணங்கும்வாசலிலே
வையகத்துமன்னவர்கள் வந்தேறும்வாசலிலே
தேசத்துமன்னவர்கள் சென்றேறும்வாசலிலே
அரசிலைத்தோரணம் ஆர்க்கும்தலைவாசலிலே
ஸ்ரீதேவிநின்று திறைகொள்ளும்வாசலிலே
செம்பொன்னும்முத்தும் திருவுமரசிலையும்
அம்பொன்னும்முத்தும் ஆர்க்குந்தலைவாசலிலே
காற்றடித்தால்மின்னும் காந்தாரிவாசலிலே
தந்தையுந்தாராவும் தன்னிற்பசுங்கிளியும்
ஒக்கவிளையாடும் உத்தமியாள்வாசலிலே
ஆறாயிரக்காதம் அகலமுள்ளவாசலிலே
அலைகடல்சூழ்வையகத்து அரையர்கள்வந்திருக்க
எல்லையுள்ளராஜாக்கள் இளவரையர்வந்திருக்க
முத்தின்முடிதரித்த முடிமன்னர்வந்திருக்க
வச்சிரமுடிதரித்த மகாமன்னர்வந்திருக்க
மாணிக்கமுடிதரித்த மகாராஜர்வந்திருக்க

ஐந்நூறுகோடி அரசமன்னர்வந்திருக்க
எழுநூறுகோடி இளவரையர்வந்திருக்க
எள்ளுபோட்டாஎள்ளுவிழா இளவரையர்வந்திருக்க
அப்பெரியமண்டபத்தில் ஆருயிரவர்முன்னே
வெட்கங்களில்லாமல் வேந்தர்பெருமாளும்
அன்றுமொருஆண்டியைப்போல் அதிதிபரதேசியைப்
பரமசிவன்போல பார்த்தன்வடிவெடுத்து [போல்
கையில்மடல்பிடித்து கண்கெட்டோர்போலிருந்தார்
எனக்குமயல்கொடுத்து என்னுட்டங்கண்டிருந்தார்
அன்றேயறிந்தேனே அருச்சுனராண்மைகளை
என்றுபரியாசம் இயலுடனேதானுரைத்து
வாருங்காணருச்சுனரே வாள்விஜயராஜாவே
வையகத்தில்வாழுகிற மாதர்குறத்திபோலே
குறவேஷம்போடுகிறோம் கொம்பனையாள்வீடுசென்று
வலிய அழைப்பாள் மாதர்கருங்குயிலும்
கட்டழகிமின்னிடைக்கு கைபார்த்துகுறியுரைத்து
கூடிக்கலந்துவாரும் கொம்பனையாள்மின்னொளியை
வணங்கியந்தமின்னொளியும் மாதுகலந்திருப்பாள்
கட்டழகிமின்னொளியின் காதலைத்தீர்த்தருள்வீர்
என்னாணைவாள்விஜயா எனக்காகநடந்திடுவீர்
போய்வாருமென்றாளே பொற்கொடியாள்மங்கையரும்
காண்டாவனமெரித்த காளையருந்தான்கேட்டு
அவளாணைபெரிதென்று ஆனந்தவாழ்மார்பன்
நீசொன்னபடியேனன் நேரிழையேபோகிறேனன்
ஆணைவிடுமென்றார் அரையர்பெருமாளும
விட்டேன்காணணையென்றாள் மெல்லியருமப்போது
என்றதுகேட்டு இசைந்தாரேவாள்விஜயன்
சந்தோஷப்பட்டாரே தாமந்தவாழ்மார்பன்
அல்லியற்கும்துரோபதைக்கும் ஆரணங்குயிருவரிலே
நடுவாகவந்தமர்ந்தார் ஞாயிறுதித்தாப்போல்
இருவர் நடுவாக இளவிஜயன்வந்தமர்ந்தார்
அப்போதுதாதிமார் ஆரணங்குமோடிவந்தார்
நாற்காலிபோட்டார்கள் நல்லமணையுமிட்டார்
முக்காலிபோட்டார்கள் முன்னேமணையுமிட்டார்
பட்டமணையேலே வந்தமர்ந்தாரருச்சுனரும்
அருச்சுனருக்குப்பின்னுலே அல்லியரும்வந்தமர்ந்தாள்

அருச்சுனனார்பின்னழகும் ஆபரணந்தன்னழகும்
முதுகழகுந்தோளழகும் முதுகில்மச்சரேகைகளும்
மீசைமுறுக்கழகும் விழிநல்லபார்வைகளும்
கச்சுகட்டுமுன்னழகும் கத்திசுருக்கழகும்
இடையழகும்நடையழகும் இசைந்தவடிவழகும்
கூந்தலழகுகளும் கொண்டசகதாழ்களும்
கண்டுமயங்கினாள் கட்டழகிமூர்ச்சையானாள்
கண்டார்கள்தோழிமார் கடுகிப்பயந்தெழுந்து
வெண்சாமரைகொண்டு வீசினாரல்லியரும்
வீசக்களைதெளிந்தாள் மெல்லியிளங்கொடியாள்
தோராவடிவழகி திரோபதையுமேதுசொல்வாள்
இராசாத்தியாயிருந்து நாயாகியேபெண்மயிலே
வையகத்தையாண்டிருந்த வாழ்வரசிராசாத்தி
கண்டுமயங்குவரோ கட்டழகன்ராசாவை
பார்த்துமயங்குவரோ பார்த்திபராசாவை
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிமனமகிழ்ந்து
அர்ச்சுனனார்கூந்தலை அவித்தாள்செகத்தாடை
ஆணழலகுமன்னன் அருச்சுனருமேதுசொல்வார்
காண்டாவனமெரித்த காளையவர்கூறுகிறார்
சோர்ந்துவிழுந்தீரோ சுந்திரப்பூமுடியை
மதுரைவளநாட்டாள் மச்சினியேசேர்ந்தீரோ
இராச்சியத்தையாளுகிற இராஜாக்கள்சோர்வாரோ
நல்மகுடம்பூண்ட இராஜாத்திசோர்வாரோ
திக்கரசையாண்டவர்கள் சீர்மழலேசோர்வாரோ
ஆறுயிரவர்கள் அணிதிரளாம்பாண்டியர்கள்
பொன்னிமலைநாடாளும் பேரெழுதியண்ணருக்கு
தலையிரக்கங்கொண்டுவந்து தார்குழலேவந்தீரோ
வடிவில்லாவம்சத்தில் வடிவுதந்தீர் நாயகரே
இப்படிபரியாச மியலுடனேதானுரைத்தார்
குங்குமத்திண்டோளன் குலுங்கநகைத்தார்கள்
தோராவடிவழகி திரோபதையுமேதுசொல்வாள்
ஆர்காணுமருச்சுனரே அதிசயமாயெண்ணாதே
தானேயழகென்று நலமுடனேபார்த்தீரே
சோர்ந்துவிழுந்தாளென்று சொல்லுகிறீரருச்சுனரே
கொத்தார்குழலியவள் கொலுவிருக்குங்கண்களுக்கு
தூக்கங்களில்லாதே துன்னுங்கருங்குழலும்

துய்யகருங்குழலாள் தூங்கிவிழுந்தாள்காண்
ஆகடியம்பேசுகின்றீர் ஆணழகாருச்சுனரே
ஆஆஆவென்று அலைந்துயலைத்துகிறீர்
உம்முடையதோல்வாயை யுள்ளடக்குமருச்சுனரே
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்பார்த்து
காளைதன்னைகுறத்தியாக காதைச்சமைக்கவேண்டும்
ஏழல்லோதாரனே இந்திரனுர்புத்திரனே
கொற்றவரைமாதுகன்னி குறக்கோலமமர்த்தவென்று
மயிரவிழ்த்துபின்போட்டு வாரிமுடிக்கலுற்ருர்
ஏத்தமஞ்சள்நின்று உருமெத்தபூங்குழலே
வண்டுமூதுகோடுபோலே மயிரைநிறமாக்கி
விட்டுவிரித்தார்போல் விடுதும்பைபூத்தாற்போல்
வந்துவிழுந்தது மன்னவனுர்தோஷயங்கள்
எல்லாத்தலைமயிரும் ஒருசாணிருசாணு
எல்லாத்தலைமயிரும் ஒருமுழமிருமுழம்
அருச்சுனனுர்கூந்தலது அறுபத்துமூன்றுமுழம்
வந்துவிழுந்தது மன்னனுடசேஷயங்கள்
காவேரிவந்து கரைகோர்த்துநின்ருப்போல்
தழுவுக்கடங்காத தணிகொண்டசேஷயங்கள்
கீறிவகுத்தாளே கிளிபவளச்செவ்வாயால்
முடியைவகுத்தாளே முதுகெங்குந்தோன்ருதே
கைகளசைந்தாலே காண்டீபன்தோள்சேர்ந்தால்
சிற்றிடையாள்மாது சிறுவிரல்நோகுமென்று
மற்றுமசைந்தாலே மயிராற்றவொண்ணுதே
மாதந்தஅல்லியர்க்கு மதிமுகத்தில்வேர்வையிட
கண்டார்கள்தாதிமார்க் கடுகியேயோடிவந்து
வெண்சாமரையெடுத்து வீசுகிருளல்லியர்க்கு
தாமக்கருங்குழல்மார் தாதிகளேதுசொல்வார்
அருச்சுனனுர்கூந்தலை யலங்காரஞ்செய்வதற்கு
அகத்தினதுள்ளாக அடியார்களாகாதோ
எங்களாலாகாதோ என்றுசிலரோடிவந்தார்
யானடியேனுமடியேன் என்றுபலரோடிவந்தார்
காண்டாவனமெரித்த காளையவர்கூறுவார்
வண்டார்குழலாள் மலர்க்கரங்கள்நோகுதென்று
உண்டானதாதிமார் ஓடியிங்கேவரலாமோ
இவள்-ஏழுபிராயத்தில் எதிர்த்துவந்தநீன்முகனை

வாளெடுத்துவேலெடுத்து வளைச்சக்கரந்தானெடுத்து
கத்தியெடுத்து கனத்தவில்லுங்கைபிடித்து
ஈட்டியெடுத்து எரிபாணந்தானெடுத்து
அப்பெரியசேனைகளும் ஆனைகுதிரைகளும்
வந்தெதிர்த்தராசாக்கள் மந்திரிகளுள்ளவரை
கண்டதுண்டமாகக் கண்டித்தாள்பாணத்தினால்
நீன்முகனைமயிர்பிடித்து நேரிழையாளப்போது
தன்னுடையதேரின்கிழே நீன்முகனையிரடினளே
இத்தனைசேனைகளை ஏதாய்செயித்தாள்காண்
மயிர்முடிக்கநோகுதே மாதரிடகைத்தலங்கள்
பச்சைபசப்போ பசப்பறியீர்பைங்கிளியே
மற்றொருவர்வந்து மயிர்வகுக்கலாகாது
சிற்றிடையாள்வீட்டுக்குதேன்மொழியேநான்போகேன்
அல்லியேயுன்னுணை அனலில்வந்தாள்தன்னுணை
என்றதுகேட்டு ஏதுசொல்வாள்துரோபதையும்
வீணனவார்த்தைகளை வேண்டாங்காண்வாள்விஜயா
எங்களுக்காகவே இத்தனையுஞ்செய்கிறது
எங்களிடகாரியத்தை நிறைவேற்றப்போகிறீரோ
நீரேசுகப்படுவீர் நேரிழையாள்வீடுசென்றால்
பாராளமைந்தன் பாக்கியந்தான்பெறுவீர்
தருமத்தைதானினைந்தோம் தாமந்தவழ்மார்பா
மற்றொருவர்வந்து மயிராற்றக்கூடாதோ
பின்னொருவாசலுக்குப் போகிறவரல்லவே
நானேநானென்று நடந்தீர்குறியாக
ஆணழகாஉந்தனுக்கு ஆகாதோமற்றொருவர்
நானேவருகிறேன் நல்விஜயாஉந்தனுக்கு

அருச்சுனரை குறவேஷந்தரித்து அலங்கரித்தது.

என்றந்தமாதரும் இளவிசையன்மயிராற்றி
ஒவ்வொருமயிருக்கு ஒவ்வொருபொன்னிதழும்
ஒவ்வொருமயிருக்கு ஒவ்வொருபூவிதழும்
பொன்னிதழும்பூவிதழும் பூட்டியலங்கரித்து
வாரிமுடித்தாளே வாள்சவுரிவுள்ளேவைத்தாள்
மல்லிகைத்தாழை மணமுள்ள செண்பகமும்
இருவாட்சிமல்லிகையும் உவர்க்குமகிசெண்பகமும்
கொன்றைகுடமல்லிகையும் கொத்தலரிமந்தாரை

வைத்துமுடித்தாளே மயிருக்கழகாக
குச்சுகளுங்கட்டியே குப்பியலங்கரித்தாள்
செம்பொன்சரட்டாலே சேர்த்ததிருமணியும்
கொங்குமதயானை நெருங்கக்குழல்முடித்து
மங்கையரைப்போலாகச் சொருகினாள்மன்னனுக்கு
மாதரைப்போலாக மங்கைநல்லாள்தான்முடித்தாள்
வயிரக்கடுக்கனை வாங்கியவர்காதிலிட்டு
காதுக்குப்பொன்னோலை கட்டழகிசாத்தினாள்
கொந்தளஓலையிட்டாள் கொப்பியிட்டார்வாளியிட்டார்
பக்கப்புகடிகளும் பச்சைக்கல்முறுகுமிட்டாள்
முத்தணிந்தமார்பில் முத்துரவிக்கைபோட்டாள்
நாய்க்காரைப்பொன்னோலை நடுக்கழுத்தில்சாத்தினாள்
ஒற்றைச்சரடுகள்ளாம் ஒருபுறமாம்பொற்சரிகை
இரட்டைச்சரடுகளாம் இரத்தினபொன்தாலி
முத்துமணித்தாழ்வடமும் மார்நிறைந்ததாழ்வடமும்
வட்டப்பதக்கமும மார்நிறைந்ததாழ்வடமும்
மூன்றும்பிறைபோலே முத்துகண்டிதாழ்வடமும்
ஐந்தாம்பிறைபோலே அழகானதாழ்வடமும்
சந்திரகாரஞ்சரப்பளியும் தரித்தாளேவிஜயருக்கு
மூக்குத்திசிந்தாக்கு முன்கையிலமுதாரிகளும்
பத்துவிரலுக்குப் பதிந்தகனையாழிகளும்
காலாழிகல்லணையாம் பீலாழிபில்லணையாம்
பாவாடையுள்ளுடுத்தி பட்டாடைமேல்சாத்தி
முத்துசுருள்விட்டு முந்தாணிதொங்கவிட்டு
அக்குமணிகொக்குமணி அழகானபவழமணி
பச்சைமணிபாலமணி பாங்காய்கழுத்திலிட்டு
வையகத்தில்வாழுகிற மாதுகுறத்தியைப்போல்
சிங்காரக்குறத்தியைப்போல் சிராகச்சோடித்தாள்
நாமந்தரித்து நற்சாந்துபொட்டுமிட்டாள்
தாதியையழைத்து தையலருமேதுசொல்வாள்
குறக்கூடைகொண்டுவா கொம்பனையேதேன்மொழியே
அப்போதுதாதியரும் ஆரணங்குதானெழுந்து
முத்துபச்சையிலே முழுவயிரந்தன்னாலே
மாணிக்கக்குறக்கூடை மாதர்கள்சொப்பனிட்டு
குறக்கூடைதன்னிலே குள்ளநரிகொம்புவைத்தார்
எண்ணைதடுக்கையொன்று இயலுடனேவைத்தாகள்

குழந்தைகள்விளையாட கிலிகிலிப்பைவைத்தார்
கூத்திகளுக்காகவே கூடையில்மருந்துவைத்தார்
நரைபோயிளமைவர நல்லமருந்துவைத்தார்
வேசிக்குமருந்துகள் விதமுடனேவைத்தார்கள்
குமாரருக்கேற்ற மருந்துவைத்தார்கூடையிலே
உரிக்கயிறுதாம்புக்கயிறு உஞ்சல்கயிறுவைத்தார்
வக்காமணியும் மலேவேப்பங்கொட்டைகளும் [ள்
சித்துருண்டைவைத்தாள் சிறுநரியின்கொம்புவைத்தா
இந்திரரும்வானவரும் இசைந்ததொருகூடையிலே
சந்திரரும்சூரியரும் சந்தித்தகூடைபோலே
மூவுலகந்தான்மதிக்கும் மூத்துரத்தினகூடைபோலே
செம்பொன்குறக்கூடை தேன்மொழியாள்முன்னேவைத்தாள்
அல்லிப்பெருமாளும் ஆரணங்கேதுசொல்வாள்
வாடிமலேக்குறத்தி மலேயாளகட்டுவச்சி
விண்ணின்குறத்தி வீரானகட்டுவச்சி
என்னகுறக்கூடை யென்றுளேயல்லியரும்
வாள்விஜயனருச்சுனரும் வாங்கிக்குறக்கூடைதன்னை
குறமாதுபோலக் கூடையிடுக்கினர்
தாங்கிக்குறக்கூடை தன்மருங்கிலேபிடுங்கி
ஒற்றையிட்டகைத்தலத்தில் பொற்பிரம்புகோல்பிடித்து
கடுகிநடந்தாளே கட்டழகிகட்டுவச்சி
வஞ்சியிடைதுவள மாதுஸ்தனங்குலுங்க
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுவாள்
ஆச்சிதுரோபதையே அருச்சுனரைப்பாருமென்ருள்
ஒக்குமோகாலமிது உத்தமியேசிரழகும்
கட்டழகிமாதரைக் கண்ணிட்டுப்பாருமென்ருள்
விஜயனர்தன்னழகை மெல்லியருந்தான்பார்த்து
சரியவிளமுலேமேல் சன்னல்பின்னல்தாழ்வடமும்
கட்டழகன்கைதலத்தில் கரிவளேயல்தன்னழகும்
கடைக்கண்ணிலஞ்சனமும் கட்டழகன்கருங்குழலும்
அஞ்சனப்பொட்டுகளும் அழகானநாமங்களும்
வாள்விஜயன்பெண்கோல மானதொருதன்மைகளும்
தென்னடிவாவென்று திருமுகத்தைதான்பார்த்து
வளநாடிவாவென்று மதிமுகத்தைதான்பார்த்து
கன்றிற்ருேகன்றிற்ருே காண்டீபனர்ச்சுனர்க்கு
அல்லியற்குமர்ச்சுனற்கும் ஆலாத்திசுற்றுமென்ருள்

தாமக்கருங்குழல்மார் தாதியர்கள்தான்கேட்டு
ஆயிரம்பெண்களவர் ஆலாத்திகழுப்பெடுத்தார்
சீரானபொற்கலத்தில் செஞ்சோறும்வெண்சோறும்
காட்டிச்சுழற்றியே கதிரோன்முன்விட்டெறிந்தார்
திக்குச்சுழற்றியே திசைநான்கும்விட்டெறிந்தார்
கற்பூரமுத்துதிரக் காராவிநெய்சேர்த்து
குத்துவிளக்குதனைக் கொழுந்துபடவேற்றினார்கள்
பிறவாமுடிதரித்தபெண்பெருமாளேதுசொல்வாள்
இந்திரக்கட்டுவச்சி ஏற்றமுள்ளபூங்குறத்தி
மந்திரக்கட்டுவச்சி மலையாளப்பூங்குறத்தி
எங்கள்குறக்கூடை தருவீரிளங்கொடியே
சிங்காதனத்தைவிட்டுத் திகழக்குதித்திறங்கி
அம்பொன்சிங்காதனத்தை ஆர்க்கக்குதித்திறங்கி
குறக்கூடைதான்பரித்துக் குலுங்கநகைநகைத்தார்
குறக்கூடைதான்பரித்துக்கொம்பனைமாரேதுசொல்வார்
வாருங்காணர்ச்சுனரே வார்த்தையொன்று நீர்கேளும்
பரமசிவன்தன்கையிலே பாசுபதம்பெற்றேனென்றீர்
ஆதிசிவனிடத்தில் அதிகவரம்பெற்றேனென்றீர்
நாங்களறிந்ததில்லை இராஜாவே அந்நடக்கை
இப்போ-ஆதிசிவனைநோக்கிஅடிபணிந்துவாள்விஜயா
சிவனையடிபணிந்து குறக்கூடைவாங்குமென்றார்
அப்போதுவாள்விஜயன் அருச்சுனரேதுசொல்வார்
அல்லியிற்பிறந்தவளே அரசாளும்நாயகியே
தீயிற்பிறந்தவளே தென்னாடன்பாவையரே
நீங்களிருவரு மருளியகாரியத்தை
நான்-மீறிநடந்ததுண்டோ வேல்புருவங்கண்ணாளே
அப்படியேயாகுதென்று அருச்சுனரும்போய்நடந்தார்
கோவிற்புறமாகக் கொற்றவனும்வந்துநின்று
ஈஸ்வரனார்கோவிலண்டை எழில்விஜயன்வந்துநின்று
ஆண்டவரைதானினைந்து யருச்சுனனேதுசொல்வான்
சிவனாரைத்தானினைந்து தேர்விசையனேதுரைப்பான்
அத்திமுகத்தோனே ஐங்கரனேவிக்கினரே
சத்தியருள்புத்திரனே சரிந்தவயிற்றோனே
ஆரணியும்வேணி அரனார்திருமகனே
நீரணியுங்கங்கை நீள்சடையோன்புத்திரனே
வேழமுகமுடைய விநாயகரேநான்சரணம்

கந்தாகடம்பா கதிர்வேலா நான்சரணம்
வள்ளிதெய்வானைபங்கா வடிவேலா நான்சரணம்
அற்புதனேசோதி அகிலாண்டநாயகியே
சாம்பசிவனாரே சங்கரனே நான்சரணம்
உம்பர்கள்போற்றும் உமையவளே நான்சரணம்
இலட்சுமிமனோகரனே நாயகனே நான்சரணம
கொம்பனைமாதர்கள் குறக்கூடைதந்தார்கள்
கொடுத்தாப்போல்தான்கொடுத்து கூடைபறித்தார்கள்
அற்புதமானதொரு அம்மன்குறக்கூடை
உற்பனமாயெனக்கு உகந்துடனே தாருமென்றான்

அருச்சுனன் குறக்கூடை வாங்கின குறம்.

தினதெந்தினதினதெந்தின தினதெந்தின தினன
தென்னதினதெந்தின தினதெந்தினனதினன

மகாதேவராயனே மதிசூடுஞ்சிவனே
மலைமகளையொருபுறத்தில் வைத்தமகாதேவா
திசையெட்டுமாண்டவரே திக்கெங்குநீரே
தீராதவினைதீர்க்கும் சிவனாரும்நீரே
ஆராருமளவிடுமோ அரனாரேயும்மை
ஐயனேயுன்பாதம் போற்றியென்றுதொழுவேன்
பூராயமாகவே குறக்கோலந்தனக்கு
புகழானகுறக்கூடை தரவேணுமையா
இந்திரனார்லோகத்து ஊர்வசியாள்கூடை
இமையவரும்முனிவர்களும் நிறைந்திருக்குங்கூடை
ஈஸ்வரரும்ஈஸ்வரியும் நிறைந்திருக்குங்கூடை
இயலான நான்முகனும் இசைந்திருக்குங்கூடை
இந்திரரும்வானவரும் நிறைந்திருக்குங்கூடை
இடைதனக்கும்நடைதனக்கும் இசைந்திருக்குங்கூடை
நினைத்தாற்போற்குறியுரைக்க நிச்சயமாங்கூடை
நீலமயில்வாகனரே வள்ளியருளவேணும்
குறித்தாற்போல்குறியுரைக்க கூடவருளவேணும்
குமரருளாலெனக்குக் கூடைதரவேணும்
அப்பர்மலை ஆதிமலை பொன்மலையிற்குறத்தி
அரனேயுன்பொன்மனையில் அடியிணை நான்சரணம்
அன்றுமகக்குறிகள்சொன்னேன் ஐயமில்லைகுறத்தி
அரனேயுன்திருவடிக்கீழ் அருச்சுனன் நான்சரணம்

திருவேங்கிடமாயனுக்குச் சிந்தையுள்ளகுறத்தி
செங்கழுநீர்மாலைபூணும் தெய்வநல்லகுறத்தி
சீரானவிஜயனுக்கு கூடைதரவேணும்
சிவசங்கராவென்றுசொல்லி தேர்விசயன்காணும்
பார்த்தனுக்குப்பாசுபதம் கொடுத்தார்போலெனக்கு
பரிதானகுறக்கூடை தரவேணுமையா
விஜயனார்முறையிடவே விமலருந்தாமும்
வீமனகுறக்கூடை அருளினார்மிகவே

வேறு

பார்த்தனதுகைக்கொடென்று பரமசிவன்தானனுப்ப
கொண்டுவந்துகைகொடுத்தாற்கொப்பெனவேதூதர்கள்
சந்தோஷப்பட்டானே தாமந்தவாழ்மார்பன்
ஆணலழகுமன்னன் அருச்சுனனரேதுசொல்வார்

குறம்

அரகரசிவமகாதேவா ஆண்டவனேசரணம்
அற்புதனேயுன்திருவடிக்கீழ் அருச்சுனனுன்சரணம்
திரிபுரத்தைக்கைத்தெரிந்த சிவனேயுந்தன்சரணம்
திங்கள்பிறைதரித்ததொரு தேவாயுந்தன்சரணம்
மங்கையுடன்தங்கையுமாய் மதிசூடுஞ்சிவனே
மான்மழுவுந்தரித்ததொரு மகாதேவாசரணம்
காமனைக்கண்ணாலெரித்த கைலங்கிரிவாசா
கண்மூன்றுடையவரே கர்த்தனே நான்சரணம்
அருச்சுனர்க்குப்பாசுபதம் தந்தாற்போலெனக்கு
அன்புவைத்துகுறக்கூடை இன்பமுடன்தந்தீர்
கூடைதனை நானிடுக்கிக் குறிகள்மிகவுரைக்க
குறித்தாப்போல்குறியோட குமரரநுளவேணும்
என்றவனுங்கூடைதனை இடுக்கினான்விஜயன்
இயலானதுரோபதையாள் அருகேவந்துநின்றாள்

வேறு

தீயிற்பிறந்தவளே தென்னுடன்பாவையரே
அல்லியிற்பிறந்தவளே அல்லிமலர்நாயகியே
கொடுத்தாப்போல்கூடைவந்து கூடைபறித்தீர்கள்
கூடையிதோவாங்கிவந்தேன் என்றானேகொற்றவரும்
அப்போதுதுரோபதையாள் அல்லியருமேதுசொல்வாள்

வாடிமலைக்குறத்தி மலையாளக்கட்டுவச்சி
இந்திரக்கட்டுவச்சி இயலானபூங்குறத்தி
மந்திரக்கட்டுவச்சி மலையாளப்பூங்குறத்தி
எங்கிருந்துவந்தாய் இளங்குறத்திகூறுமென்முர்
மின்னிடைக்குச்சொல்லி உரைக்குங்குறிகளொன்று
எங்களுக்குச்சொல்லி உரைப்பாயிளங்குறத்தி
காண்டாபுரமெரித்த காளைமனமகிழ்ந்து
உங்களுக்குக்குறியுரைத்தால் ஏதுதரப்போறீர்கள்
மார்பில்தரித்ததொரு மணிப்பதக்கந்தருவீரோ
முத்துமணித்தாழ்வடத்தை தருவீரோமொய்குழலே
அப்படிசெய்கின்றேம் ஆனந்தவாழ்மார்பா
என்றதுகேட்டு ஏதுசொல்வானருச்சுனனும்
அங்கவள்காலை மடித்துப்புரந்தணிந்து
வண்ணக்குறக்கூடை வைத்துவொருபுறமாய்
பொற்பிரப்பங்கோல்பிடித்துப் பூங்குறத்திவந்தார்கள்
பெண்ணணங்குசேரவே பொற்கொடியாள்வீற்றிருந்து
வாடைக்கிளிபோலே வண்ணமயில்போலே
தென்றற்கிளிபோலே தீவில்மயில்போலே
சற்றேநகைந்தவனும் கனிவாயைத்தான்திறந்து
கூறுவான்பார்த்தனவன் குறமாதரைப்போலே
ஏற்றகுறிதானுரைப்பான் இயலானஅருச்சுனனுர்

பெண்களுக்குக் குறி சொல்லுகிற குறம்

(தின) எந்தனதுதிருநாடு கேட்கிறையோபெண்ணே
ஏற்றமுள்ளயிந்திரனு ராளுமந்தநாடு
நாகத்திலேஅரியுரையும் எந்தனதுநாடு
நான்மறைகளோதுவதும் எந்தனதுநாடு
பொற்கவளைவளநாடு எந்தனதுநாடு
பொங்குகடல்திரைசூழும் எந்தனதுநாடு
இத்திரனுர்லோகமும் எந்தனதுநாடு
ஏற்றமுள்ளபாஞ்சாலனுளுமெந்தநாடு
பச்சைமலைபவழமலை எந்தனதுநாடு
பாண்டியர்களாள்கிறது எந்தனதுநாடு
கொச்சிமலைகுடகுமலை எங்களதுநாடு
கொற்றவர்கள்ஆள்கிறது யெந்தனதுநாடு
வெள்ளிமலைபொன்மலைகள் எந்தனதுநாடு

விண்ணவர்களாள்கிறதும் எந்தனது நாடு
பாய்போட்டுமுத்தளக்கும் எந்தனது நாடு
பாண்டவர்களாள்கிறதும் எந்தனது நாடு
தோற்போட்டுமுத்தளக்கும் எந்தனது நாடு
துரியோதிரனுள்கிறதும் எந்தனது நாடு
அலையடித்தால்முத்தொதுங்கும் எந்தனது நாடு
அல்லியிடதிருநாடும் எந்தனது நாடு
எட்டெழுத்தாயுட்பொருளா யோதுமந்த நாடு
ஏற்றமுள்ளதீவுகளும் எந்தனது நாடு
ஐந்தெழுத்தையுட்பொருளா யோதுமந்த நாடு
அரியுடனே அயனுறையும் எந்தனது நாடு
திக்குசெயங்கொண்டுவரும் எந்தனதுநாடு
சிலைவிஜயன்பெயர்கொண்ட குறத்தி நான்பெண்ணே
பஞ்சவர்களைவருட நாடுமெந்த நாடு
பார்த்தனதுபெயர்கொண்ட குறத்தி நான்பெண்ணே

வேறு

தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
வாடிமலைக்குறத்தி மலையாளக்கட்டுவச்சி
விண்ணின்குறத்தியரே வீறுடையகட்டுவச்சி
நாட்டுவளப்பமெல்லாம் நன்றாயுரைத்தாயே
சீமைவளப்பமெல்லாம் சீராயுரைத்தாயே
உன்பெயரும்ஊர்பெயரும் உச்சிதமாய்த்தோன்றுதடி
தெய்வக்குறத்தி நீ தெளிவானகட்டுவச்சி
எந்தனதுகைபார்த்து இன்பக்குறியுரையும்
கண்டதுகண்டாற்போல கட்டுவச்சிகூறுமென்றாள்
வண்ணக்குறத்தியவள் வாய்திறந்தேதுசொல்வாள்

துரோபதைக்குக் குறி சொல்லுகிறது

(தின) வட்டமதிமுகத்தாளே தீயில்வந்தபெண்ணே
வலக்காரத்தை நீகேட்டால் நான்குறிகள்சொல்வேன்
எழில்விஜயன்தேவியரே பாஞ்சாலன்பெண்ணே
இடக்கரத்தை நீகேட்டால் இசைந்தகுறிசொல்ல
செங்கமலக்கைதலத்தைத் தீண்டியே நான்பிடித்தால்
திருவினையே அதனுலே குடிப்பழுதுமுண்டோ
மங்கையர்க்கும்மங்கையர்கள் கைகள்தனைப்பிடித்தால்

வாழ்பாஞ்சாலன்மகளாரே குலப்பழுதுமுண்டோ
பங்கயஞ்சீர்கைத்தலத்தைப் பார்த்தனுமேபிடித்து
பாவையுடன்முகம்நோக்கிப் பலகாலுஞ்சிரித்தான்
கட்டழகிகைத்தலத்தைக்கண்ணிலொத்திக்கொண்டான்
கண்மலரோபெண்மலரோ கைத்தலங்களென்பான்
சங்குசெறிகைநலது உன்குலமுநலது
ஸ்தனத்தில்மிகுமறுநலது தழைத்துமிகவாழ்வாய்
அருச்சுனரைமாலையிட அருந்தணலிலுதித்தாய்
அழகுடையபாஞ்சாலன் உனைவளர்த்தான்பெண்ணே
பார்த்தனைதான்மாலையிட பத்தரையில்வளர்ந்தாய்
நவமுடன்நீவளர்ந்த நாளையிலேபெண்ணே
அருச்சுனனுடைந்துபேராம் அரசாண்டதுரைகள்
அரக்குமாமாளிகையில் ஐவரிறந்தாரென்று
வில்லைவளைத்தபேர்களுக்கு மெல்லியரைக்கொடுக்க
வீரமுரசுதிவந்து விருதுபறையறைந்தான்
அவ்வார்த்தைமிகவரிந்து அருச்சுனனுர்தாமும்
அன்றுமொருபார்ப்பான்போல் அந்தசபையில்வந்தா
இராசாதிராசாக்கள் நாணிதலைசாய்க்க [ன்
நலமுடனேவில்வளைத்து உனைமணர்ந்தான்பெண்ணே
எட்டாதவில்வளைத்து ஏழில்விஜயன்றனக்கு
இணைபிரியாதேவியராய் நீயிருந்தாய்பெண்ணே
மங்கிலியம்விஜயனுர் தரித்தநாள்முதலாம்
மன்னவர்களைவருக்கும் தேவியருமானுய்
தருமர்பெருந்தேவியென்று தனிமாலைசூட்டி
தன்சொல்லோமேலாக தணித்திருந்தாய்பெண்ணே
ஒருவருடம்ஓராண்டு உனைப்பிரியான்விஜயன்
உன்மையடியென்குறிகள் தன்மையடிபெண்ணே
தயவுள்ளபெண்ணரசே சகலகுணரதியே
சம்பத்துமென்னுளும் தவறுமல்வாழ்வாய்
என்றவளைத்தான்பார்த்து இணைவிழியாள்மிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடைதுவளநகைத்தாள்

வேறு

வாடிமலைக்குறத்தி மலையாளக்கட்டுவச்சி
தெய்வக்குறத்திகண்டாய் தெளிவானகட்டுவச்சி
பார்த்ததுபார்த்ததுபோல் பட்சமாநீயுரைத்தாய்

கண்டதுகண்டாற்போல் கட்டுவச்சிகூறிவிட்டாய்
உன்னைப்போல்கட்டுவச்சி உலகத்தில்நானறியேன்
என்தங்கையல்லியற்கு ஏற்றகுறிசொல்லுமென்ருள்
பரிகலத்திற்சோறிடுவாள் பாலுமிகபூரிப்பாள்
மதுரைவளநாட்டிற்கு வகைபுரிவாய்மலைக்குறத்தி
அழகியபூமாது அல்லியரைத்தான்பார்த்து
காண்டாவனமெரித்த காளையவர்கூறலுற்ருர்

அல்லிக்கு குறிசொல்லுகிற விதம்

(தின) ஆயிரம்பாண்டியர்கள் அரியதவஞ்செய்ய
அன்றலர்ந்ததாமரையில் வந்துதித்ததிருவே
ஆண்மலடாய்பெண்மலடாய் அரியதவன்செய்ய
ஆணழியப்பெண்பிறந்து அவர்கள்வினைதீர்த்தாய்
சிறந்தகுலபாண்டியற்குச் செங்கோலுஞ்செலுத்தி
தென்னுடைதிறமையுடன் ஆளவந்தாய்பெண்ணே
ஏழாம்பிராயத்திலே இளவயதாய் நீயும்
எதிர்த்துவந்தநீன்முகனை தலையறுத்துப்போட்டாய்
தேர்வண்டிக்காலிலே நீன்முகனைஇரடி
செங்கோலரசாண்டாய் திறமையுள்ளபெண்ணே
மதிப்புடனேதென்மதுரை வளநாட்டையாள
வாழ்விஜயனுள்ளழகை கண்டேயடலூர்ந்தான்
மற்ருெருவன்தன்திறமோ எழுதிமடலூர்ந்தான்
அச்சுதனுர்கிருபையினுல் விஜயரும்தாமும்
அல்லியரேஎழுதிமடலூர்ந்தமணஞ்செய்தான்
சொக்கருடகிருபையினுல் செங்கோலுஞ்செலுத்தி
திறமையுடனிராச்சியத்தை யாளுகிருய்பெண்ணே
பரிவுடனேபாண்டியர்கள் பயின்றெடுத்ததிருவே
பார்த்தனுக்குமயிலணையே பண்புள்ளரதியே
உன்னழகையொருவரா லெழுதவல்லாருண்டோ
ஒருவரும்உன்மனையில் உனைப்பிரியான்விஜயன்
அடியளந்தமைத்துனனு ரானபடியாலே
அதிசயமாயுன்வடிவை எழுதிகளைதீர்த்தான்
கும்பமுலைஸ்தனத்தாளே கோகநகையாளே
குவலயத்தோர்கொண்டாடும் குஞ்சரமேபெண்ணே
அமிர்தமென்னுங்குணத்தாளே அன்னநடையாளே
அரசமுடிதானணிந்த அமுர்தபசுங்கிளியே

கொங்கைரெண்டுந்தான்தளும்ப செங்கரத்தால்பிடித்து
சேர்ந்தணையவிசயனிப்போ வருவானடிபெண்ணே
என்குறிகளொருநாளும் பொய்யாமிதுபின்னே
எழில்விசயனொருநாளு முனைப்பிரியான்மயிலே
கொம்பனையேயென்குறிகள் பொய்யல்லடியென்று
கொங்கியம்மையாணையென்று கூடையின்மேலடித்தாள்
இக்குறிகள்பொய்யாமோ அல்லியரேயென்று
என்னாணைஉன்னை என்றவளுஞ்சிரித்தாள்

வேறு

நீலக்கருங்குழலி நிகரில்லாப்பெண்பெருமாள்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
வாடிமலைக்குறத்தி மலையாளக்கட்டுவச்சி
தெய்வகுறத்தி தெளிவானகட்டுவச்சி
நீசொன்னகுறியாலே ஒன்றும்பழுதுமில்லை
கண்டதுகண்டாற்போல் கட்டுவச்சிசொல்லிவிட்டாள்
பார்த்ததுபார்த்தாற்போல் பட்சமாய்நீயுரைத்தாய்
உன்னைப்போல்கட்டுவச்சி உலகத்தில்நானறியேன்
எங்களுக்குச்சொன்ன இசைந்தகுறிகளைப்போல்
எங்களதுபுத்திரர்க் கிசைந்தகுறிசொல்லுமென்ருள்
மைந்தன்மேல்பாடுமென்ருள் மாலைக்குறத்தியரை
பிள்ளைகள்மேற்பாடுமென்ருள் பூங்குறத்திநாயகமே

மைந்தர்மேல் பாடுகிற குறம்.

(தின) வையைபெருப்பாண்டியர்கள் செய்தபெருந்தவத்
வாடாததாமரையில் வந்துதித்ததிருவே [தால்
பொய்யாதவில்மாரி சொரியவல்லாற்புதல்வன்
போர்விஜயன்பயின்றெடுத்த புதல்வனுந்தன்பிள்ளை
துதிமுகனையாள்வாண்டி உந்தனிடபுதல்வன்
திக்குசெயங்கொள்வாண்டி தேர்விஜயன்புதல்வன்
ஜெயவீரபாண்டியர்கள் தம்முடையபேரன்
பொன்னின்மலைநாடாளும் போரெழுதிமருமகன்
பெருமையுள்ளபஞ்சவர்க்கு புத்திரனுமவனே
பேர்பெரியபுகழான புளந்திரனர்பெண்ணே
என்றவளைத்தான்பார்த்து இணைவிழியால்மிரட்டி
அல்லியரைக்கொண்டாடி யாடியேதான்பார்த்து

சிற்றிடையேசெந்தணலில் வந்துதித்ததிருவே
ஜெகமேழுமாள்வார்கள் உந்தனிடபுதல்வர்
அழகுடையபாஞ்சால வைவர்களதுபேரர்
அன்னமேவுன்கலியைத் தீர்க்கவந்தபுதல்வர்
பாடிவந்தேனுங்களை நான் பாஞ்சாலன்மகளே
பட்டாடைநீதருவாய் பலமணியுந்தருவாய்
பாஞ்சாலன்மகளே நீ பைங்கொடியேசிராய்
பந்துஸ்தனமேலிருக்கும் பதக்கமுநீதருவாய்
சிற்றாடைநீதருவாய் சிறுமணிகள்தருவாய்
செந்தணலில்வந்துதித்த சேயிழைநல்லாளே
என்றவளைத்தான்பார்த்து இணைவிழியாள்மிரட்டி
இளங்குறத்திதனைப்போல இடைதுவளநடந்தாள்

வேறு

தோராவடிவழகி துரோபதையுங்கூறுவாள்
அமையுமமையும் ஆணழகிசொன்னகுறி
உன்பொருட்டினாலே பிழைப்பாண்டியுன்கணவன்
குங்குமத்திண்டோளன் குலுங்கநகைநகைத்து
போதனையும்போதாச்சு பொழுதென்றால்போகுதுகாண்
மின்னிடையாள்வாசலுக்கு விஜயரேபோங்காணும்
அடியார்கள்சாயநல்ல வருச்சுனரேதுசொல்வார்
நீங்கள்-அன்னமுந்தாராவும் அழகுமல்லரேவிருக்க
உங்கள்-இருவரையும்விட்டு பிரியமனம்வருமோ
உங்களைப்பார்க்கிலு மதிசயமோமின்னிடையாள்
எப்படிபோவேன்கா ணிலங்கொடியேவுன்னைவிட்டு
போவென்றுசொல்லி பொற்கைப்பிரம்பெடுத்து
பொற்கைபிரம்பெடுத்து போர்விஜயன்றனையடித்தாள்
அடிபட்டருச்சுனனும் ஆலித்தெழுந்திருந்து
சிறுமுறுவலுற்றான்தன் தேவிமுகம்நோக்கி
சீறியடித்தீரே தீயில்வந்ததெள்ளமுதே
சீறியடித்தீரே தெய்வகுலநாயகமே
சீறியடித்தீரே சிங்கவரிப்புலியே
ஆறிற்றோகோபம் என்றான்சிலைவிஜயன்
தேறிற்றோகோபம் என்றான்சிலைவிஜயன்
தோராவடிவழகி துரோபதையுங்கூறுவாள்
எய்யுமதனம்போல மெய்யாகவாள்விஜயா

மைக்கலந்தகண்ணலே மயக்காதேவாள்விஜயா
எங்கள்கவையை நீர் உத்தரிக்கப்போகிறீரோ
ஆர்க்காகப்போகிறீர் ஆரணங்குவாசலுக்கு
எனக்காகப்போகிறீரோ இந்திரனர்புத்திரனே
நீரேசுகப்படுவீர் நேரிழையாள்வாழ்ந்திடுங்கள்
நீர்-மதப்பட்டயானையைப்போல் நின்றுமயங்காதே
அக்கமாரேகேட்டீரோ ஆரணங்குகுறத்தியவள்
முத்தைநிகர்த்தபல்லும் மூக்கணிந்தசெவ்வாயும்
ஒற்றையிடைமருங்கும் ஒவ்வியஞ்சீர்பட்டுடையும்
பொற்கொடியாள்பேரழகும் பொற்பிரப்பங்கோலழகும்
பார்த்தார்குறத்தியரைப் பங்கயஞ்சிர்கண்ணளே
மன்னவனர்சிந்தையது மயங்கிறதைக்கண்டீரோ
வாள்விஜயன்சிந்தையது மயங்கிறதைக்கண்டீரோ
வாள்விஜயராஜாவை வாருமென்றுதானழைத்து
மற்ெருருவர்வாசலுக்கு போகாதமன்னவனே
பின்னெருவர்வாசலுக்கு போகாதேசுந்தரனே
சித்தாயன்றங்கையந்த சிறிக்கிமனேபோகாதே
மின்னிடையாள்வாசலுக்கு விஜயரேபோயிருந்து
ஒராசனத்திற்கு உடனுகநீயிருந்து
மூத்தானமின்னிடைக்கு மூன்றுதிங்களானபின்பு
ஸ்ரீமந்தமென்றுசொல்லி வாருங்கான்தேர்விஜயா
கலியாணமென்றுசொல்லி காவலனே நீவாரும்
என்றதுகேட்டுமவ ரேதுசொல்வாரருச்சுனரும்
அனலிற்பிறந்தவளே அரசாளும்பத்தினியே
நீங்களிருவரும் அணிந்திருந்தபொற்பதக்கம்
கூடப்பிறந்ததொரு பதக்கம்கொடுத்தீராகுல்
என்றதுதான்கேட்டு யேதுசொல்வாள் துரோபதையும்
கொடுத்தாலேயல்லது கொற்றவனேபோகிறீரோ
என்று-கழற்றிக்கொடுத்தாளே கட்டழகிபொற்பதக்கம்
அவள்பிறந்தபோதே கொம்பனையாள்பொற்பதக்கம்
கூடப்பிறந்ததே கொம்பனையாள்பொற்பதக்கம்
கழட்டிக்கொடுத்தாளே கட்டழகிபொற்பதக்கம்
மின்னெளியாள்வாசலுக்கு விஜயரேபோங்காணும்
மற்றெருவர்வாசலிலே மன்னவரேசென்றீராகுல்
பின்னெருவர்வாசலிலே மன்னவரேசென்றீராகுல்
வேட்டையிலேகண்டாளே வெட்டியேபோட்டிடுவேன்

என்சமர்த்துஞ்சேவகமும் எல்லாந்தெரியுமே
போய்வாவிஜயாவென்று பொற்கொடியுங்கூறிவிட்டாள்

குறத்தி தனித்துப் போகிறது

மாணிக்கப்பொற்பதக்கம் வாங்கிகழுத்திலிட்டு
மாதர்குறத்தியைப்போல் வாள்விஜயன்தானடந்தான்
தங்கிக்குறக்கூடை தன்னிடுப்பில்வைத்ததுவும்
முழங்கையால்தானிடுக்கி மூக்குமேல்கையைவைத்து
அசைந்துநடந்தாள்காண் ஆரணங்குகுறத்தியரும்
பொற்பிரப்பங்கோல்பிடித்துபோய்பிடித்தாள்கட்டுவச்சி
கண்டவர்கள்சோர்ந்துவிழக் கட்டுவச்சிதானடந்தாள்
வாசலும்வாசலது படியேழுந்தான்கடந்து
தெத்துகடந்தாளே தெருவீதிபோகலுற்ருள்
அன்னநடைதுரோபதையும் அரசாளும்நாயகியும்
அருச்சுனன்போனபின்பு அலங்காரநாயகியும்
தாதியிருவர்களைத் தையல்மார்தாமழைத்து
அருச்சுனனர்பின்னலே ஆரணங்கேபோங்களடி
அவர்-எங்கெங்கேபோனலும் எத்திசையிற்சென்ருலும்
எவ்வாசல்போய்நுழைவார் என்றறிந்துவாங்களடி
மின்னிடையாள்வாசலுக்கு விஜயனர்போனபின்பு
அருச்சுனரையறியாமல் அறிந்துவாதாதியென்ருள்
அவ்வார்த்தைகேட்டுமே ஆரணங்குபோகலுற்ருர்
அறியாதுபோலாக ஆணழகன்பின்ருெடர்ந்தார்

குறத்தி பெண்கள் வீதி வருகிறது.

அப்போமலைக்குறத்தி அத்தெருவுந்தான்கடந்து
வீதியும்வீதி தெருவும்பலகடந்து
பவளக்கொடிமாது பத்தினியாள்வீதிவாருள்
அந்தத்தெருகடந்து அப்பாலேபோகலுற்ருள்
போகவதிமாது பொற்கொடியாள்வீதிவாருள்
நாகமடந்தையந்த நறுநுதலாள்வீதிவாருள்
அந்தத்தெருகடந்து அப்புறம்போகலுற்ருள்
அத்தெருவுந்தான்கடந்து மற்ருெருவீதிவாருள்
சோரவளமாது சுபத்திரையாள்வீதிவாருள்
அன்னம்போலநடந்து அவ்வீதிவாருளாம்
வாடைக்கிளிபோல வாருளேஅக்குறத்தி

வஞ்சியிடைதுவள மாதுஸ்தனங்குலுங்க
மின்னற்கொடிபோலே மெல்லிவருகிருளே
அழகுதுலங்குது ஆனந்தங்கொஞ்சுது
வடிவுங்குலுங்குது மாணிக்கங்கொஞ்சுது
மயில்போல்தலைவளைத்து மாதுவருகிருளே
சுபத்திரைவாசலிலே தோழிமார்பார்த்திருந்தார்
இந்தக்குறத்தியரை யெங்கிலுங்கண்டதில்லை
தெய்வக்குறத்தியோ திக்கெட்டில்கண்டதில்லை
மின்னிற்பிறந்தவளோ மேகவர்னன்மச்சினியோ
கன்னித்திருப்பாற்கடலில் வந்தகருவில்லோ
மாதுகுறத்தியரைக் கண்டதில்லைவையகத்தில்
அடி-வாடிமலைகுறத்தி மாதருக்குக்கைபார்க்க
சுவாமியுடதங்கையவள் சுபத்திரைக்குக்கைபார்க்க
உண்மைக்குறியுரைத்தால் உச்சிதம்தான்கொடுப்பேன்
ஆடைகள்முத்துரத்னம் ஆபரணந்தான்கொடுப்பேன்
வாடிகுறத்தியென்று வருந்திஞர்தாதியர்கள்
போகமனமுண்டோ பொற்கொடியாள்வாசலுக்கு
அல்லிப்பெருமாளும் அறிந்தாளேயாமாளுல்
மின்னிடையாளானபடி வம்பனென்றுமூதிவைப்பாள்
அப்படிக்கேளாளே அல்லிமலர்நாயகியாள்
நீன்முகனைக்கொன்று நீலியிட்டபெண்பெருமாள்
வெட்டத்துணிவாளே வீரியத்தைச்செய்வாளே
கணவனென்றுபாராளே கண்டித்துபோட்டிடுவாள்
யாரென்றும்பாராளே அல்லிப்பெருமாளும்
சேர்ந்தவுடல்பிடிப்பாள் சேவகத்தைக்காட்டுவாளே
வரிந்துவுடல்பிடிப்பாள் வல்லமையைக்காட்டுவாளே
உயிரிருந்தாலுக்கால் உப்புவிற்றுவுண்ணலாம்
பொற்கொடியாள்வாசலுக்கு போவதுநல்லதல்ல
நாளைவருவோமென்று நாயகியும்போய்நடந்தாள்

சகாதேவன் வீதி வருதல்.

அத்தெருவைத்தான்விட்டு மற்ருெருவீதிவாருள்
தாமமுடியானுஞ் சகாதேவன்வீதிவாருள்
அந்தத்தெருவிலே அனந்தம்பேர்பார்த்தார்கள்
மின்னிற்பிறந்தவளோ மேகவர்னமச்சினியோ

கன்னிதிருப்பாற்கடலில் வந்தகருவிளமே
எழுதவொண்ணுவடிவழகி இவ்வீதிவந்தாள்காண்
இவளைப்போல்கட்டுவச்சு இவ்வுலகில்கண்டதில்லே
காய்க்கும்பிராயமவள் கன்னிகட்டுங்காலமவள்
பூர்க்கும்பிராயமவள் பிஞ்சுவிடுங்காலமவள்
கொஞ்சம்பிராயங்கண்டீர் கொழுந்தெல்லாம்பிஞ்சுகண்
பாதிவயதுகண்டீர் பக்கமெல்லாம்பிஞ்சுகண்டீர் [டீர்
மையல்பெருகியே மயங்கியேயோடிவந்தார்
சுத்திவளைத்தார்கள் சூழ்ந்தார்கள்குறத்தியரை
வாடிமலேக்குறத்தி மாளிகைக்குக்கொண்டுபோருேம்
மெத்தைமேல்வைக்கிருேம் வெண்பணிபூட்டுகிருேம்
வருவீரோகட்டுவச்சி என்றுவளைத்தார்கள்
மாதுகுறத்தியவள் மலேக்குறத்தியேதுசொல்வாள்
மயில்போல்தலேவளைத்து மங்கையருமேதுசொல்வாள்
வண்ணக்கிளிபோலே வாய்திறந்தேதுசொல்வாள்

சகாதேவன் வீதியில் குறம்

தின-தருமர்பெரும்நாட்டுக்குள் தழைத்தோங்கிவாழ்ந்
தனிவழியேபோறயென்னே வழிமறிக்கலாமோ [தோம்
இச்சையுடனிவ்வுலகில் பிச்சைக்குப்போறேன்
இஷ்டமுடனேடிவந்து இச்சைசெய்யலாமோ
ஐவருடசீமையிலே அதர்மங்களுண்டாச்சோ
அதிதிபரதேசிகளை அகடுசெய்யலாமோ
கந்தருக்குங்கைபார்க்குங் கானகக்குறத்தி
கண்டவர்க்குப்பெண்டாக பெண்டுகளாசொன்னீர்
வண்டாடுகொண்டையின்மேல் கண்டாசைப்பட்டு
மயங்கியேவிழுந்தாளே மனப்பழுதுவருமே
மிண்டுகளைப்பேசாமல் விரைந்தோடிப்போங்கள்
கொண்டவனறிந்தாலே குடிகேடுவருமே
வம்பருமாய் தும்பருமாய் வழிமறித்துஎன்னே
மனேயாட்டியாகவே வழிமறிக்கலாமோ
சாத்திரத்தில்மிகுந்ததொரு சகாதேவரருகில்
சூத்திரமாய்ப்போயுரைத்து தெண்டனேகள்செய்வேன்
என்றவரைத்தான்பார்த்து இணைவிழியால்மிரட்டி
இளங்குறத்திதனேப்போலே இடைதுவளநகைத்தாள்

வேறு

வந்தவந்தமன்னரெல்லா மையல்பெரிதாகி
காமவிகாரமது களைகள்பெரிதாகி
சகாதேவராஜாவும் சற்றேயறிந்தாலே
பழுதல்லோ நமக்கு பார்வேந்தமன்னவரே
ஆக்கினைசெய்வார்காண் அழும்புவருமன்னவரே [ர்கள்
என்று-அவரவர்மாளிகையில் அசைந்தாற்போல்போனா

நகுலன் வீதி வருவது

அந்தத்தெருகடந்து ஆரணங்குகட்டுவச்சி
மற்றொருவீதியிலே வாராளேகட்டுவச்சி
நகுலராதுவீதியிலே நடந்தாளேகட்டுவச்சி
அந்தத்தெருவிலே அனந்தம்பேர்மன்னவர்கள்
கண்டார்குறத்தியரைக் கட்டுவச்சிதன்னழகை
பார்த்தார்குறத்தியரைப் பங்கயஞ்சீர்கண்ணாளே
இதுபுதுமைஇதுபுதுமை இதுநெடுநாள்கண்டதில்லை
கண்டுமறியோமே கதையிலுங்கேட்டறியோம்
பார்த்துமறியோமே படத்திலுங்கண்டறியோம்
இவள்போல்வடிவழகி எங்கிலும்நாமறியோம்
இந்தக்குறத்தியரை எங்கிலும்கண்டதில்லை
என்று-வம்பறுந்தும்பருமாய் வந்துவளைத்தார்கள்
மையல்பெருகியே மயங்கியேவந்தார்கள்
வாடிமலைக்குறத்தி எங்களுக்குகைபார்க்க
வீதிவீதியாகவே விரும்பித்திரிவானேன்
கானலிலும்வெய்யலிலும் கடுகித்திரிவானேன்
உள்ளங்கால்கொப்பளிக்க உச்சிவெடித்துவிட
வேண்டிவிடாய்த்து வெளியில்திரிவானேன்
வாடிமலைக்குறத்தி மாளிகைக்குகொண்டுபோறோம்
என்றதுகேட்டு யேதுசொல்வாளக்குறத்தி

நகுலன் வீதியில் குறம்

(தின) நகுலராஜர்வீதியிலேவாழுகின்றமன்னோர்
நகுலத்தகுணமுடைய ராஜாக்களேவாரீர்
இலகுமதிசடையணிந்த ஈஸ்வரனாருளால்
இத்தெருவில்குறம்பாட நத்தியிங்கேவந்தேன்

மெத்தவேவருத்துகிறீர் உத்தமரே நீங்கள்
தேவியின்மேலாசைகொண்டீர் ஆவியெல்லாமுருகி
உங்களுக்கும்பெண்களோ உமக்குக்கூத்தியாரோ
உகமையுள்ளமன்னவரே அகமகிழ்ந்துகேளீர்
என்னைவந்துஆதரிக்கும் இராசமன்னரானால்
இயல்புறவேமனங்களித்து அரண்மனையில்போவீர்
சிற்றிடையார்வாழுகிற தெருக்களெல்லாந்திரிந்து
சீருடனேகுறம்பாடி பேர்கேட்டுவருவேன்
இலகுபுகழ்வீதியிலே எனைமறுத்தீரானால்
நகுலனதுசபைதனிலே நானுரைப்பேன்பாராய்
என்றவரைத்தான்பார்த்து இணைவிழியாள்மிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடைதுவளநடந்தாள்

வேறு

அப்போதுமன்னவர்கள் அனைவருந்தான்பார்த்து
குறத்தியிவள்தன்னாலே குற்றங்கள்நேருமென்று
நகுலரறிந்தாலே நமக்குவருமோசமென்று
மெத்தப்பயந்தவர்கள் வீட்டுக்குள்போய்நுழைந்தார்
அவரவர்மாளிகையில் அப்படியேபோய்சேர்ந்தார்

அருச்சுனன் வீதி வருதல்

அப்போதுகுறத்தியரும் அலங்காரக்கட்டுவச்சி
அந்தத்தெருகடந்து மற்றொருவீதிவாருள்
அருச்சுனனார்வீதியிலே அழகாய்நடக்கலுற்றாள்
அந்தத்தெருவிலே அனந்தமானபேர்களெல்லாம்
வண்ணக்குறத்தியரைக் கண்டார்கள்மன்னரெல்லாம்
முத்துநிகர்பல்லும் முறுக்கணிந்தசெவ்வாயும்
புருவச்சிலையழகும் பொருந்தும்விழியழகும்
காமன்கடைந்ததுபோற் கலசத்திளமுலையாள்
ஈழத்துதச்சனவன் எழுதிவரவிட்டானோ
தானேசமைத்தாளோ தையலிளங்கொடியாள்
இவள்போல்வடிவழகு எங்கிலும்நாமறியோம்
என்று-வண்ணப்பசுங்கிளியை வந்துவளைத்தார்கள்
சுத்திநின்றபார்ப்பார் சுரூபங்குறத்தியென்போர்
வாடிமலைக்குறத்தி மாளிகைக்குகொண்டுபோறோம்

மெத்தையின்மேல்வைக்கிறண்டி வேணபணிபூட்டுரண்
என்றுசிலபேர்கள் இளமாதைசூழ்ந்துகொண்டார் [டி
வாடிமலேக்குறத்தி என்றுவழிமறித்தார்
அப்போகுறத்தியரும் ஆரணங்குமேதுசொல்வாள்
மயில்போல்களேகளேத்து வாய்திறந்தேதுசொல்வாள்

அருச்சுனன் வீதியில் குறம்

(தின) சிலநுதலாள்மலர்விழியாள் தேர்விஜயன்தாமும்
சூழ்ந்துவந்தமன்னருக்கு சொல்வாளொருவார்த்தை
பாதிசடையணிந்த பரமசிவனருகில்
பாசுபதம்பேருபெற்ற பார்த்தன்வடிவுடையோன்
இனியேசகாலர்களே யிராட்சதரைக்கொன்று
இந்திரலோகம்பட்டங்கட்டி யிருந்தரசையாண்டார்
அச்சுதனர்தோழனவ னருச்சுனமகாராஜன்
அவருடையவீதியிலே அழும்புசெய்வாருண்டோ
சத்தியந்தவருத தருமர்தம்பிவிஜயன்
தாக்குடையாள்வீதியிலே வாக்குதப்பாமல்
ஐயமென்றுபாடவந்தேன் வையகங்கள்மீது
அருச்சுனனர்வீதியிலே அழும்புசொல்வாருண்டோ
பொதுவாகநானுங்களுக்குப் பெண்டுகளாமென்ன
புண்ணியனருச்சுனர்க்குப் போயுரைப்பேன்கண்டீர்
புண்ணியனர்குந்திமகன் போர்விஜயனருளால்
பெண்டாளவந்தீர்களோ பூங்குறத்திதன்னே
மண்டலத்திவீதியெல்லாம் பாடிவந்துமென்னே
மலேயாளக்குறத்தியென்று சற்றுநினேயாமல்
கொச்சக்குறத்தியென்று சற்றுநினேயாமல்
கூடுகைக்குஆசைமனம தோன்றுதடாஉனக்கு
என்கணவன்பொல்லாதவன் எழும்புப்புலிகொல்வான்
எதிர்த்தவரைதலேயறுப்பான் மலேக்குறவன்பொல்லான்
காட்டானேசிங்கங்களுங் கரடிபுலியானே
கண்டகண்டமிருகங்களேத் துண்டிடவேகொல்வான்
அண்டையிலேநில்லாதே அகலப்போங்களென்று
அலங்காரக்குறத்தியவள் மிகநோக்கிவந்தாள்
என்றவரைத்தான்பார்த்து இணேவிழியாள்மிரட்டி
இளங்குறத்திகளேப்போல யிடைதுவளநடந்தாள்

வேறு

வந்துநின்றமன்னரெல்லா மையல்பெரிதாகி
ஏக்கத்துப்பார்த்து யிருந்தார்களெல்லோருங்
கையறுந்தயானையைப்போல் கலங்கியே நின்றார்கள்
சிறகுபறிகொடுத்த செம்பருந்துபோலானார்கள்
கொண்டைபறிகொடுத்த கோழிபோலானார்கள்
ஓடுகிறமானுக்கு ஒருகாலொடிந்தாப்போல்
மத்தங்காய்தின்றாற்போல் மயங்கியே நின்றார்கள்
காமக்கணையாலே களைதாங்கிநின்றார்கள்

வீமன் வீதியில் வருகுதல்

அப்போமலைக்குறத்தி அந்தத்தெருகடந்து
மற்றொருவீதியிலே வாராளேகட்டுவச்சி
மன்னன்மதகரியான் மகாராஜன்வீதிவந்தான்
மதகரிவீமனது மாடத்தெருவில்வந்தாள்
வெற்றிமதயானை வீமனதுவீதியிலே
அந்தத்தெருவிலே அனந்தம்பேர்கூடினார்கள்
வம்பராய்க்கூடினார்கள் வல்லார்சிறுவர்களும்
தும்பராய்க்கூடியே சூழ்ந்தார்குறத்தியரும்
ஒருவயதாய்க்கூடினார் ஒருகோடிராஜாக்கள்
இளவயதாய்க்கூடினா ரிராஜாக்களுள்ளவர்கள்
வந்துவளைத்தார்கள் மாதுகுறத்தியரை
இந்தக்குறத்தியரை எங்கிலுங்கண்டறியோம்
திக்கெட்டில்கண்டதில்லை தெய்வக்குறத்தியரை
இவள்-கட்டுவச்சியல்லவடா காமன்ரதியென்பாரும்
இளநிலவரைப்போல ஏந்திழையாள்வடிவழகும்
மின்னற்கொடியாளோ மேகவர்னன்றங்கையரோ
கன்னிதிருப்பாற்கடலில் வந்தகருவிளமோ
கிழங்கள்பழங்களெல்லாம் கிட்டிவந்துபல்திறந்தார்
வாருய்குறத்தியரே மாளிகையிற்கொண்டுபோறோம்
கானலிலும்வெய்யலிலும் கடிகித்திரிவானேன்।
வெய்யலிலேதிரிந்து பெத்தவிடாயாவானேன்
சிங்காதனத்தில்வைத்து சேவித்துப்பார்க்கிறண்டி [டி
மெத்தையின்மேல்வைக்கிறண்டிவேணபணிபூண்டுறண்
பெண்களுக்குள்ளபேரை பேணிதொழில்செய்யுவிப்பேன்
ஆண்பிள்ளைகளுள்ளபேரையடப்பம்பிடிக்கவைப்போம்

வாருய்குறத்தியென்று மாதரைச்சூழ்ந்துகொண்டார்
வண்ணக்குறத்தியவள் வாய்திறந்தேதுசொல்வாள்
கொம்பிலிருந்து கூவுங்கிளிபோல
கிளிபோலவாய்திறந்து கூவுவாள்கட்டுவச்சி

வீமனது வீதியில் குறம்

(தின) சிறந்தகுலபஞ்சவர்கள் செங்கோலைச்செலுத்தி
ஸ்ரீராமர்கிருபையினுல் ஜெகமேழுமாண்டார்
எழுபிராயத்திலே இடும்பன்றனைக்கொன்று
எதிர்த்துவந்தயிராட்சதரை சங்கரித்தவீமன்
பத்துபிராயத்திலே பகாசூரன்றன்னை
பழுதறவேகிழித்தெறிந்த பாரமதகரியான்
மதத்தானைசங்கரிக்கும் மதுவீரராமன்
வாழும்பெருவீதியிலே வம்பர்களுமுண்டோ
கொச்சைக்குறத்திநான் பிச்சைக்குவந்தால்
கூடிமயலாகியென்மே லாசைபடுவாரோ
இச்சையுடனிவ்வுலகில் பிச்சைக்கிப்போறேன்
இஷ்டமுடனேடிவந்து யிலச்சைசெய்யலாமோ
ஐயாதுசீமையிலே அதர்மங்களுண்டாச்சோ
அதிதிபரதேசிகளை அகடுசெய்யலாமோ
கந்தருக்குகைபார்க்கும் கானகக்குறத்தி
கண்டவர்க்குபெண்டாக மிண்டுகளாசொன்னீர்
வண்டாடுகொண்டையின்மேல் கண்டாசைப்பட்டு
மயங்கிவிழுந்தாலே மனப்பழுதுவருமே
கொண்டவரறிந்தாலே குடிகேடுவருமே
வம்பர்களுந்தும்பர்களும் வந்துவழிமறைத்து
மனையாளாய்வாருமென்று யெனையழைக்கலாமோ
இங்கிதமாய்வீமருடன் யானுரைத்தேனுல்
மயங்கிவிழஉங்களைத்தான் வதைத்திடுவார்போடா
இப்போதுபோயுரைப்பே னப்புரம்போறீரோ
என்றவரைத்தான்பார்த்து யிணைவிழியால்மிரட்டி
இளங்குறத்திதனைபோல யிடைதுவள நகைத்தாள்

வேறு

அத்தண்டமன்னரெல்லாம் அசைந்தாற்போல்நின்று
மையல்பெரிதாகி மயங்கியேநின்றுவிட்டார் [விட்டார்

மாணிக்கம்பொற்பதக்கம் மார்பிலசைந்தாட
ஏக்கற்றூர்போல யிருந்துவிட்டார்மன்னரெல்லாம்

தருமர் வீதி வருதல்

அந்தத்தெருகடந்து அப்பாலேபோகலுற்ருள்
வீதியும்வீதி தெருவும்பலகடந்து
சந்தனவடிவழகர் தருமராதுவீதிவந்தாள்
மின்னற்கொடிபோலே மெல்லியருந்தான்வருவாள்
காமரூபவடிவழகி கட்டுவச்சிதன்னழகை
அந்தத்தெருவிலே அனந்தம்பேர்கண்டார்கள்
சுத்திவந்துபார்ப்பார் சொரூபக்குறத்தியென்பார்
கட்டுவச்சியல்லவடா காமன்ரதியென்பாரும்
சார்ந்தநடையழகும் தாழ்வடத்தின்முத்தழகும்
குறத்திவடிவழகை கொற்றவர்கள்தான்பார்த்து
பார்த்துமனமிரங்கி பல்லைத்திறப்பாரும்
மல்கட்டுங்கொங்கையின்மேல் மனங்களித்துபார்ப்பாரு
பின்னழகைக்கண்டு பிர்மித்துநிற்பாரும்
மூன்னழகைக்கண்டு மூர்ச்சையாய்விழுவாரும்
வாடிகுறத்தியரே மதன்கனேயைத்தீராயோ
முத்துநிகர்பல்லும் முறுக்கணிந்தசெவ்வாயும் [போல்
இருண்டெழுந்தசோலையிலே சிவந்தெழுந்தசந்திரன்
அந்தக்குறத்தியரை அனந்தம்பேர்பார்த்திருந்தார்
கட்டுவச்சிநாயகியை கண்டுமயலானர்
கிழங்கள்பழங்களெல்லாம் கிட்டிவந்துபல்திறந்தார்
வாடிமலைக்குறத்தி மாளிகையில்விட்டுபோருேம்
மெத்தையின்மேல்வைக்கிருேம் வேணபணிபூட்டுகிரு
சிங்காசனத்தில்வைத்துச் சேவித்துபார்க்கிருேம் [ம்
பொன்னடிக்கீழ்தெண்டனிட்டு புட்பமலங்கரிப்போம்
மன்மதபாணமது மார்புருகிப்போகுதடி
கூடியணைந்தாலே குறைதீருங்கட்டுவச்சி
மெத்தையுண்டுமேடையுண்டு வீற்றிருக்கச்சோலையுண்டு
சுத்தியுலாவுதற்குச் சிங்காரச்சோலையுண்டு
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கதாதியுண்டு
படுக்கவிடமுண்டு பள்ளிகொள்ளத்தாவுமுண்டு
தின்னநல்லபாக்குமுண்டு செம்பொன்னனேகமுண்டு
அணியப்பரிமளமும் அள்ளிதரப்புனுகுமுண்டு

வாராயோகட்டுவச்சி மாளிகைக்கழைத்துப்போரேும்
என்றுதுடர்ந்தார்கள் மியலானகுறத்தியரை
மாதுகுறத்தி மலைக்குறத்தியேதுசொல்வாள்
குறமாதர்போலாக கொம்பனையாளேதுசொல்வாள்

தருமர் வீதியில் குறம்

(தின) கொன்றைமல்லிமுல்லைசூடுங் குமரேசர்நாட்டில்
கொங்குவங்காளமதில் குடியிருக்குங்குறத்தி
கொச்சிமலைகுடகுமலை வாழுகின்றநாங்கள்
குமரேசர்வள்ளியற்குங் குறியுரைக்குங்குறத்தி
பச்சமலைபவழமலை வாழுகின்றநாங்கள்
பசிகாலமானாலே பழங்கூறிவருவோம்
சந்திரகுலம்விளங்கவந்த தருமர்பெருநாட்டில்
தாரணியில்குறம்பாட தனித்துவந்தேனிங்கு
பிச்சைகுறத்தியர்மேல் யிச்சைபட்டீர்நீங்கள்
புண்ணியனார்தருமருடன் போயுரைப்பேன்பாராய்
தருமர்பெரும்வீதியிலே அதர்மங்களுண்டாச்சோ
சற்றெனவேபோயுரைத்துத் தலைதரிப்பேன்பாராய்
பொன்மூழுகுந்துறைதனிலே போய்முழுவார்தருமர்
பொய்வசனமுரையாத புகழ்வேந்தராசன்
உண்மையுடனவருக்கு வுரைத்தமதிதானே
உன்னுண்மையாலேவந்து வின்னுண்மைசொன்னீர்
வம்பர்களோதும்பர்களோ வழிமறிக்கவுன்னை
மனையிடத்துசமூசாரி யென்றுமறியாலாச்சே
என்குறவன்பொல்லாதா னிதுவறிந்தானானல்
உங்களிடநாவறிந்து வுயிர்வதைகள்செய்வான்
உத்தமற்குபிறந்ததொரு புத்திரருமானல்
பரிந்துவந்துயெனைமறிக்க நியாயமுண்டோசொல்வீர்
தேவதாசிமக்கள்நீங்க ளானபடியாலே
தெருவில்போகுங்கன்னியரைத் தீண்டியழைத்தீர்கள்
அச்சமறநாட்டுக்குள்ளே சற்றுபயமில்லையோ
அப்புறம்போமென்றவளு மஞ்சிநடைநடப்பாள்

வேறு

மாதர்குறத்தியுட வார்த்தைதனைகேட்டவர்கள்
மெத்தப்பயந்தார்கள் விடவிடென்றுதானடுங்கி

ஓடுகிறமானுக்கு ஒருகாலொடிந்தாற்போல்
ஒருகாலொடிந்துஓடிவந்தமுடவனைப்போல்
மையல்பெரிதாகி மயங்கியே நின்றுவிட்டார்
ஏக்கற்றூற்போலே யிருந்துவிட்டாரெல்லோரும்
மத்தங்காய்தின்ருற்போல் மயங்கிநின்றுவிட்டார்

பள்ளிக்கூடத்துவீதி வருதல்

அந்தத்தெருகடந்து அப்பாலேபோகலுற்ருள்
வீதியும்வீதி தெருவும்பலகடந்து
ஓதிவைக்கும்வீதியிலே உத்தமியாள்வாருளே
பள்ளிக்கூடத்திலே வருகின்றபாதையிலே
வாத்தியார்வீதியிலே வருகின்றபாதையிலே
அப்போகடோற்கஜனும் அபிமன்னராசாவும்
இந்திரராஜனவள் யிளவரையன்கோமான்
அரவானுந்தொந்திசெட்டி ஐவரிளம்பாண்டவர்கள்
இளம்பஞ்சபாண்டவர்கள் இயலானசிறுவருடன்
அண்டையயல்பிள்ளைகள் ஆயிரஞ்சிறுவருடன்
சிறுவயதுபிள்ளைகள் தோழமார்தன்னுடனே
பள்ளிக்கூடத்திலே பகல்பாடமொப்பிவைத்து
கணக்குதொகைகளுடன் வாசங்களொப்பிவைத்து
பார்த்தன்புதல்வரெல்லாம் பாலமுதவுண்ணவென்று
ஐவர்சிலவருளால் அரண்மனைக்குவாரூர்கள்
மக்கள்வருகிறதை வாழ்குறத்திகண்டுவிட்டாள்
செண்டுபந்துவிளையாடி தெருவீதிவாரூர்கள்
புத்திரன்வரவைக் கண்டாளேபூங்குறத்தி
பிள்ளைகள்தன்வரவைக் கண்டவளும்பூரித்தாள்
உள்ளங்குளிர்ந்தவளும் உடம்பெங்கும்பூரித்து
சரீரங்குளிர்ந்தாளே சர்வாங்கம்பூரித்தாள்
அபிமன்னன்தானறிந்தா லாச்சியுடன்போயுரைப்பான்
ஆயனுடன்பிறந்தாள் அறிவையாள்தானறிந்தால்
சித்தசன்றங்கையவள் சுபத்திரையாள்தானறிந்தால்
காரியங்களல்லவென்று கடுகநடக்கலுற்ருள்
தெரியாமற்போவோமென்று மிஞ்சியவள்நடந்தாள்
விளையாடிவாரபிள்ளை மெல்லியரைக்கண்டுவிட்டார்
பாலர்சிறுவரெல்லாம பார்த்துவிட்டார்குறத்தியரை
தூரவருகையிலே துரைமக்கள்கண்டார்கள்

போர்க்கஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறுவான்
அண்ணாவேகண்டீரோ அதிசயமானகதை
நம்மூரில்சூரியன் எங்குமயமாவான்காண்
ஆதித்தன்சூரியன் அவருதயமானுக்கால்
கிழக்குதயமாகியல்லோ மேற்கேயடைந்திடுவான்
மேற்குதயமானுப்போல் விந்தையாய்தோன்றுகுது
வருகிறகுறத்திதன் வடிவழகைபார்த்திடுங்கள்
குன்றின்மேல்சந்திரன் குதித்தெழுந்தபாவனைப்போல்
இவளழகும்பாவனையும் எங்கிலும்கண்டதில்லை
மின்னற்கொடியோதான் மேகவருணன்மச்சினியோ
கன்னிதிருப்பாற்கடலில் கருவிளமாய்வந்தவளோ
முத்துநிகர்பல்லும் முறுக்கணிந்தசெவ்வாயும்
வண்டுங்கொண்டையது மயிரழகும்பாவனையும்
புருவச்சிலையழகும் பொருந்தும்விழியழகும்
கூரியமூக்கழகும் குளிர்ந்தமுகமழகும்
கன்னன்கடைந்தால்போல் கலசத்திளமுலையும்
இடையழகும்நடையழகும் இடைக்கிசைந்தபட்டுடையு
ஆபரணமின்னு மலங்காரச்சோதிகளும் [ம்
ஈழத்துதச்சன் எழுதிவரவிட்டானோ
சித்திராதிபோலே தெருவீதிவாராளே
பட்டணத்துவீதியிலே பார்த்தீபன்காண்கிலையோ
அஞ்சனம்போல்வாரவளை அருச்சுனனார்காண்கிலையோ
கண்டால்விடுவாரோ காண்டீபாருச்சுனரும்
ஐயாருகாக அழைத்துப்போய்விடுவோமா
என்றதுகேட்டுமவ னேதுசொல்வானல்லரவான்
தம்பிகெடுத்தாயே தாழ்வானவார்த்தைசொன்னாய்
அருச்சுனனார்தம்மருகே வழைத்துபோய்விட்டாலே
இந்தக்குறத்தியண்டை எந்நேரவாசமதாய்
விட்டுப்பிரியாமல் வீற்றிருப்பாருச்சுனரும்
நமது-ஆச்சிமார்பாடெல்லாம் பட்டல்லோ ஆணழகா
மூலைசிறைகாப்பார்கள் மொய்குழல்மார்தாயார்கள்
அந்நேரம்நம்மைவைத்து பிடியும்படையுமாகும்
என்னமதிசொன்னீர்காண் என்னுடையதம்பியரே
இத்தையறியேன்காண் என்பிறப்பேயண்ணாவே
அய்யாகுணமறிவோ மவர்நடத்தைநாமறியோம்
நம்முடையஆச்சிமார் நாயகிமாரெல்லோரும்

அவரவர்கள்தன்வீட்டி லனைவரையும்போகவிட்டு
குறத்தியருகாக குடியிருப்பார் நம்தகப்பன்
என்றிவர்கள்பேசி இசைந்துவருகையிலே
மாதுகுறத்தியிட மார்பில்பதக்கமது
தோராவடிவழகி திரௌபதை நாயகியாள்
அல்லிப்பெருமா ளரசாளும் நாயகியாள்
இவ்விருவர்பொற்பதக்க மிவள்கழுத்திற்கண்டார்கள்
கண்டுபுலந்திரனுங் கட்டழகனேதுசொல்வான்
அண்ணாவேகண்டீரோ ஆச்சிமார்பொற்பதக்கம்
ஆச்சிமார்பொற்பதக்கம் ஆரந்திருடிவந்தாள்
கன்னமிட்டுவந்தாள்காண் கட்டுவச்சிநாயகியாள்
விஷமக்குறத்தியரை வந்துவளைத்தார்கள்
சில்லுபில்லென்று சிறுவரெல்லாங்கூடினார்கள்
வல்லக்குறத்தியரை வந்துவளைத்தார்கள்
கூடைசிலரிழுப்பார் கூடிவிளையாடிடுவார்
ஆடைபிடித்திழுப்பார் ஆபரணஞ்சிலர்கொள்ளார்
கொண்டைபிடித்திழுப்பார் கூடைபறித்திழுப்பார்
பொற்பிரப்பங்கோல்பறிப்பார் பூவாடைவலித்திழுப்பார்
குள்ளக்குறத்தியரை குட்டுங்களென்பாரும்
கள்ளக்குறத்தியரை காதறுப்போமென்பாரும்
மூல்லைக்குறத்தியரை மூக்கறுப்போமென்பாரும்
சில்லுபில்லென்று சிறுவராய்க்கூடினார்கள்
மலங்கமலங்கவே மடியைப்பிடித்திழுப்பார்
மாலைக்குறத்தி மலைக்குறத்தியேதுசொல்வாள்
வண்ணமலைக்குறத்தி வாய்திறந்தங்கேதுசொல்வாள்

### பிள்ளைகள் இழுக்கிற குறம்

தின-வம்பியல்லதும்பியல்ல விலைமாதரல்ல
வழிமறித்துமுனைகுலைத்தல் பண்ணவோவந்தீர்
நம்பிவந்தேன்பாண்டவர்கள் நாடுதனிலிரக்க
நடுவழியிலெனைமறித்து புடவைதனையிழுத்தீர்
அம்புவிழியால்மிரட்டி மறுபடியும்பிடித்திழுத்தீர்
அறியாதபயல்களென்று நானும்மனம்பொறுத்தேன்
அல்லியிடதிருமகனே அசடியிடமகனே
அல்லாதுளந்தனது வல்லாண்மைபாராய்
பயல்களென்றுகைத்தாழ்ந்தான் நெறிமுறைமையாக

அருச்சுனனார்தன்மகனே ஐவர்திருமகனே
அறியாமல்மடிபிடித்தா யபராதம்வருமே
வல்லிடும்பிதன்மகனார் வளநாடுதன்மகனே
மதியாமல்மடிபிடித்தாய் குடிப்பழுதுவருமே
அக்கினிநானுங்களுக்கு அணுகாமற்போடா
அல்லிதிருமகனே ஆண்மைகளுமறிவேன்
சொல்வசனமறியாத தருமரிதையறிந்தால்
தூறுவருமுங்களுக்கு வேறுபடப்போறீர்
இடபமதிலேறிவரும் ஈஸ்வரனார்மைந்தன்
ஈராறுகரமுடையான் யேழைபங்காளன்
திருத்தணிகைகந்தருக்கும் பாடியிடுங்குறத்தி
தெய்வலோககுறத்தியென்று தேசமெங்குமறியும்
மற்றொருத்திபோலவென்னை மடிபிடிக்கவந்தீர்
வரிசையெனக்குடன்பிறந்தார் நால்வருண்டுபொல்லார்
என்மடியைப்பிடித்திழுத்த வார்த்தைகளைக்கேட்டால்
இயலானவுன்மனது திரௌபதையாள்தன்னை
இந்நேரம்பிடித்திழுத்துப்பெண்டுவைத்துக்கொண்டார்
இடங்கெட்டபுத்திபெற்ற மகனேநீபோடா

பிள்ளைகள் கோபித்து சண்டை செய்கிறது

வேறு

இந்திரராஜனவன் இளவரையனேதுசொல்வான்
அண்ணாவேகண்டீரோ ஆகடியவார்த்தைசொன்னாள்
வாயிடும்புபேசினாள் மன்னவரேகண்டீரோ
சொல்லாதவார்த்தையிவள் சொல்லினாள்கண்டீரோ
கொம்பனையாள்திரௌபதையை குறவர்பெண்டாயிகழ்வது
பத்தினியாளென்றுசொல்லி சற்றுமதியாமற்சொன்னாள்
வாயைக்கிழிப்பேன் மணிமுடியை நானறுப்பேன்
நாக்கையறுத்திடுவேன் நாணங்குலைத்திடுவேன்
எட்டிப்பழம்போலே இருகண்ணுந்தான்சிவந்து
சவுரிப்பழம்போலே தன்னிருகண்சிவந்து
உருகியசெம்பொனது உதிரம்போல்கண்சிவந்து
இடதுபக்கஞ்சதைகளது ஈட்டிப்போலேதுடிக்க
வலதுபக்கஞ்சதைகளது வல்லயம்போலேதுடிக்க
வாங்கினான்தன்சிலையை மண்ணும்விண்ணுந்தானதிர

வில்வளைத்து நாரிபூட்டி விசையுடனேபாணந்தொட்டா
எடுத்தானே அம்பு ஏற்றினானணியிலே [ன்
நாணிபிகுவெடுக்க நானோசைபேதமிட
அண்டஞ்செவிடுபட ஆகாயந்தானதிர
தேவர் நடுங்கவே திக்குகளுந்தானடுங்க
சந்திராள்கெதிகலங்க சமுத்திரம் நீர்கள்வற்ற
பிரயோகம்பண்ணுகிறான் பெரிதான அஸ்திரத்தை
ஒன்பது நூறு ஒராயிரங்கோடி
ஏற்றினானணிதன்னை இராஜாக்கள்தானடுங்க
நகரத்தரசர்கள் திடுக்கிட்டு நாவுலர
சொர்னகிளாஞ்சியது சுந்தரமாய்செவிடுபட
கெற்பங்கலங்கவேதான் கிளிகள்சரமாரிகொள்ள
கொற்றவனுமங்கே குணத்தொனிபண்ணினார்
அம்பைதொடுத்தானே ஆரணங்கைகொல்லவென்று
விட்டான்சரபாணம் மேனியெல்லாம் நீறாக
அம்புமேலம்பு ஆயுதமாய்பொழிந்தானே
அஸ்திரம்வரும்விதங்கள் ஆர்க்கமுடிபோகாது
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடிபோகாது
ஐப்பசிமாதத்திலே அடர்ந்தமழைவந்ததுபோல்
கார்த்திகைமாதத்திலே கனத்தமழைவந்ததுபோல்
சாங்கோபசாங்கமாய்ச் சரமாரித்தான்பொழிந்தான்
அஸ்திரம்வருகிற அதிவேகத்திறமையிலே [ப்பார்
திக்கிலுள்ளசனங்களெல்லாந் திகிலெடுத்துப்பார்த்துரை
மாண்டாள்குறத்தியென்று வையகத்தார்சொல்லலுற்றார்
இந்திரபாணமது எப்படியுங்கொன்றுவிடும்
ஐயையோவென்றுசொல்லி அழுவார்சிறிதுபேர்கள்
அல்லிமகன்தொடுத்த அனந்தமானபாணமெல்லாம்
இந்திரன்விட்டதொரு பாணங்கள்தானெழும்பி
கொல்லவேவந்தது கோடானகோடிபாணம்
அருச்சுனரென்றுசொல்லி அஞ்சிப்பயந்தது
வாள்விஜயனென்றுசொல்லி மனதில் நினைத்தது
ஆரென்றுசொல்லிவிட்டான் அல்லிமகனிந்திரனும்
தகப்பனைக்கொல்லவோ தான்தொடுத்தார்பாணமது
யாராலேயாகுமிந்த அருச்சுனரைக்கொல்லுகைக்கு
பரமசிவன்கையிலே பாசுபதம்பெற்றவரை
நம்மாலேயாகுமோ ராஜாவைக்கொல்லுகைக்கு

என்றுபயந்ததுவும் இறங்கியடிபணியும்
தாளியிலையறுக்கும் தர்மரைப்பூவோரிதழும்
அட்சதையும்புஷ்பமும் அறுகுகெந்தந்தனுடனே
மாலைகளாய்வந்து வணங்குதவள்பாதம்
கண்டான்புலந்திரனும் கண்கொள்ளாக்கோபமுடன்
அண்ணாவேகண்டீரோ அம்மைவணங்கவைத்தாள்
பாணத்தைதான்மயங்க மருந்தறிவாள்பாவியிவள்
சொக்குப்பொடிமருந்து தூவும்வித்தைகற்றவள்
வானஞ்சுழலவே மருந்தறிவாள்பாவியிவள்
பூமிசுழலவே பொடியறிவாள்தோழியிவள்
கண்கட்டுவித்தைகளும் காரணமுந்தானறிவாள்
மாயப்பொடிமருந்து மாபாவிதானறிவாள்
மலையாளந்திரிந்தவள்தான் மந்திரமுங்கற்றவள்தான்
ஆனதால்ஆச்சியுட ஆரந்திருடிவந்தாள்
இந்தக்குறத்தியரை என்னசெய்வேன்அண்ணாவே
தெண்டாயுதத்தாலே சீவன்வதைபண்ணுகிறேன்
தெண்டாயுதமெடுத்து சுழட்டியறைகிறேன்
கைபறித்துதெண்டெடுத்தான் கனகமணிச்சிதைய
வெற்றிமதயானை வீமன்பயின்றெடுத்த
காளைகடோற்கெஜனும் கனகோபங்கொண்டானே
போர்க்கஞ்சாமன்னன் புலந்திரவீரியனே
நீ-அம்புக்குவல்லவன்தான் அருச்சுனனார்புத்திரனே
அம்பைத்தொடுத்தீரே அனைவோரும்பார்த்திருக்க
தெண்டுடையான்வீமன்பெற்ற திறமையுள்ளான்தானிரு
மிஞ்சாதேதம்பியரே மெல்லியரைக்கொன்றிடுவேன்[க்க
என்றேயெழுந்தானே இயல்வீமன்பெற்றமகன்
காளைகடோற்கஜனும் கடுகியேதெண்டெடுத்தான்
எட்டுதிசைநடுங்க இராஜாக்கள்குலையதிர
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்துவிழுந்திடவே
மந்திரதூபமிட்டு வாங்கிச்சுழட்டிவிட்டான்
கண்டந்தமன்னரெல்லாம் கடுகப்பயந்தார்கள்
மாண்டாள்குறத்தியென்று மண்டலத்தார்தான்புலம்ப
வருகிறகோதண்டம் வாள்விஜயனைக்கண்டு
ஆரென்றுகொல்லுதற்கு அனுப்பினன்வாள்வீரன்
பார்த்தான்வடிவுடையான் பாசுபதம்பெற்றவனே
நம்மாலேயாகுமோ ராஜாவைக்கொல்லுதறகு

என்றுபயந்துமே இறங்கியடியில்விழும்
தாளியிலைபயக்குந் தாமரைப்பூவோரிதழாம்
மாலையாம்வந்தல்லோ வணங்கிற்றவள்பாதம்
கண்டான்கடோற்கஜனுங் கண்சிவந்துகோபமுடன்
சத்திராதிபகையாளியைச் சங்கரிக்குங்கோபதெண்டு
வச்சிரகோபதெண்டு வணங்கவைத்தாளிக்குறத்தி
மாயமறிவாள் மருந்தறிவாள்கட்டுவச்சி
இந்தக்குறத்தியரை என்னசெய்யவேணுமென்றான்
இந்த-மந்திரவாளாலே இம்மாதரைவெட்டவேண்டும்
என்றுபதைத்தவனும் எடுத்தானேவாள்தன்னை
கண்டானே நல்வீமன் கடுகிவந்துதான்மறித்தான்
அபிமன்னன்வாளுக்கு ஆருமெதிருமல்ல
கனமோசம்வருகுதென்று கடுகியவனோடிவந்து
இந்திரஜாலவித்தையாலே எழும்பிவந்துவாள்பிடித்தா
வாணளபிமன்னு மதியில்லாத்தம்பியே [ர்
தூதரைக்கொன்றாலும் சூல்பசுவைக்கொன்றாலும்
வேதியரைக்கொன்றாலும் விண்ணவரைக்கொன்றாலும்
நம்பினேனென்றவரை நாமவரைக்கொன்றாலும்
ஆதரித்துவந்தவரை அவரைநாம்கொன்றாலும்
மாதரைக்கொல்வதற்கு வாள்தானெடுப்பாரோ
எதிரிபகையாளியல்ல நம்மையெதிர்த்தசத்ருவல்ல
ஆரென்றுஆயுதத்தை அபிமன்னுநீயெடுத்தாய்
ஆரந்திருடிவந்த அதிசயத்தை நாம்கேட்போம்
தருமராருகாகத் தள்ளிப்போய்விட்டிடுவோம்
கோபத்தையாற்றிவிடு குறத்தியை நாம்கேட்போம்
என்று-மவனைவிலக்கியே மன்னவனல்லரவான்
மாதுகுறத்தியுடன் வாய்திறந்தங்கேதுசொல்வான்
வாடிமலைக்குறத்தி வாள்பெரியதருமரண்டை
தருமராருகாகத் தள்ளடாவென்பாரும்
கூடைபிடித்திழுப்பார் முன்னாலேதள்ளிடுவார்
புடவைபிடித்திழுப்பார் பின்னாலேதள்ளிடுவார்
கண்ணால்கருகுவார் கையால்சிலரிழுப்பார்
கட்டுமடாவென்பாரும் காதறுப்போமென்பாரும்
நாக்கரிவோம்மூக்கரிவோம் நல்லஸ்தனமரிவோம்
என்று-மலங்கமலங்கவே மடியைப்பிடித்தார்கள்
மாதுகுறத்தியவள் மலைக்குறத்திகூறுவாள்

## குறத்தி புலம்புகிற குறம்

(தின) கூடையைப்பிடித்திழுத்தீர்கூகூ குு
கொல்லப்போருனென்கணவன்கூகூ குு
தாடையிலேசாம்பவாரீர்கூகூ குு
தலைமயிரைப்பிடித்திழுத்தீர்கூகூ குு
பின்முன்னேயென்னுமலேகூகூ குு
கையைப்பிடித்திழுக்கவாரீர்கூகூ குு
நன்றி நடுவில்லையோகூகூ குு
நீங்கள் நாடாளும்ராஜாக்கள்கூகூ குு
அண்ணர்பொல்லார் நால்வருண்டுகூகூ குு
அரிந்தால்முறைவருமேகூகூ குு
மண்ணளத்தான் தன்மதியேகூகூ குு
மடியைப்பிடித்திழுக்கவாரீர்கூகூ குு
குண்ணெடுத்ததின்மதியோகூகூ குு
கூடைதனைப்பரிக்கவாரீர்கூகூ குு
தருமரிடதன்மதியோகூகூ குு
தாடையிலேசாம்பவாரீர்கூகூ குு
வீமரிடதன்மதியோகூகூ குு
விழியால்மிரட்டுகிறீர்கூகூ குு
அருச்சுனனுர்தன்மதியோகூகூ குு
அடிக்கவாரீர்பிடிக்கவாரீர்கூகூ குு
இரட்டையர்கள்தன்மதியோகூகூ குு
நெட்டித்தள்ளுகிறீர்கூகூ குு
மிஞ்சிமிஞ்சியோடிவாரீர்கூகூ குு
மேல்விழுந்துதள்ளுகிறீர்கூகூ குு
ஆளன்குலைக்காரன்கண்டீர்கூகூ குு
அறிந்தால்குறைவருமோகூகூ குு
அதோவாரானென்கணவன்கூகூ குு
அயல் நாட்டுக்கோடிப்போங்கள்கூகூ குு
அதோவாரானென்கணவன்கூகூ குு
எங்கேயனுலோடிப்போங்கள்கூகூ குு
அம்பலத்தாரே நீங்கள்சாட்சிகூகூ குு
நான்பண்ணினபாவமிதோகூகூ குு
பசங்களெனைமறிக்கிறீர்கள்கூகூ குு
பறியாதேகூடைதனைகூகூ குு

வேறு

பஞ்சவர்மேலாணையென்ன பயந்துநடுங்கினார்கள்
காளையறவானுங் கட்டழகனேதுசொல்வான்
தள்ளாதேகுறத்தியரைத் தம்பியரேநில்லுமென்றான்
வாடிமலைக்குறத்தி வார்த்தையொன்று நீர்கேளும்
அன்னையவள்கழுத்தி லாலித்தஆபரணம்
எப்படிக்குவாங்கிவந்தா யிளங்குறத்திசொல்லுமென்றா
திருடியேவந்தாயோ செம்பொன்மணிப்பதக்கம் [ன்
கன்னமிட்டுக்கொண்டாயோ களவுசெய்துவந்தாயோ
மருந்துமயக்கத்தாலே வாங்கியேவந்தாயோ
எப்படிவந்தாய்நீ இளங்குறத்திசொல்லுமென்றான்
வண்ணநடைகட்டுவச்சி வாய்திறந்தேதுசொல்வாள்
அனலிற்பிறந்தாட்கும் அல்லியிற்பிறந்தாட்கும்
இருவருக்கும்கைபார்த்து பெற்றேனேயிப்பதக்கம்
உண்மைகுறிசொல்லி பெற்றேன்காணுத்தமனே
அப்படிப்பட்ட சமர்த்தியோ நீகுறத்தி
ஆச்சியிடபொற்பதக்கம் ஆருக்குங்கொடுப்பதில்லை
ஆலவாய்சொக்கரவ ரையரேவந்தாலும்
பிட்டுக்குமண்சுமந்த பித்தரேவந்தாலும்
நரியைப்பரியாக்கும் நாதரேவந்தாலும்
உரியில்வெண்ணெய்திருடியுண்ட உலகளந்தார்வந்தாலும்
உரலோடுகட்டுண்ட மாயனார்வந்தாலும்
ஆயிரங்கண்படைத்த தேவேந்திரர்வந்தாலும்
எழுதும்பிரமனும் எமன்கூடவந்தாலும்
ஏமனவர்வந்தாலும் எக்காலமானாலும்
வாங்காரொருநாளு மாணிக்கப்பொற்பதக்கம்
உனக்குக்கொடுத்தாளோ உத்தமியாளென்தாயார்
அவள்பிறந்தவன்றே யழுந்தியசிராபரணம்
கூடப்பிறந்தது கொம்பனையாள்பொற்பதக்கம்
எப்படிவாங்கிவந்தா யெங்களுக்குச்சொல்லுமென்றார்
எங்கள்ஆச்சிக்குச்சொன்னகுறி எங்களுக்குசொல்லடிநீ
இவ்வார்த்தைகேட்டு ஏதுசொல்வாள்கட்டுவச்சி
உங்கள்குணத்திற்குக் குறிசொல்லவேணுமடா
கூடையைப்பற்றி யிழுத்தீரேகொற்றவரே
கூடையில்சேதமது கொடாமல்விடுவேனோ

பிள்ளைகளுக்குக் குறஞ் சொன்னது

(தின)கூடையெனுங்கூடைகண்டாய்கொந்தளப்பொன்
குமரேசர்வள்ளியற்கு குறிசொல்லுங்கூடை [கூடை
சந்திரருஞ்சூரியருஞ் சந்தித்தகூடை
தவமுனிகள்ரிஷிகளெல்லாம் நிறைத்திருக்குங்கூடை
குறித்தாற்போலகுறியுரைக்கும் கூடையதுகூடை
கோபாலலட்சுமிக்குங் குறிகள்சொல்லுங்கூடை
ஆணியில்லா நல்வச்சிர மழுத்திருக்குங்கூடை
கொந்தளப்பெண்ணிட்டமன்னு கூடைதனையிழுத்தீர்
தயவுவந்ததுமேலே குறியுரைப்பேனேடா
என்குறவன்பொல்லாதவ னென்னைத்தேடிவருவான்
உங்களிடமாளிகைக்கு ளொதுங்கிநடப்பீரே
அந்திபடும்வேளையாச்சு சந்தடிகள்வேண்டாம்
அரண்மனைக்குபோங்களென்று மிகவுரைத்தாள்குறத்தி

வேறு

இவ்வார்த்தைதான்கேட்டுஎதுசொல்வான் நல்லரவான்
வாரும்மலைக்குறத்தி வார்த்தையொன்று நீர்கேளும்
ஆச்சிக்குச்சொன்ன குறியிலொன்றுயெங்களுக்கு
சொன்னாலேயல்லாது சுந்தரியேபோகவிடோம்
குறிசொன்னாலல்லாது கொம்பனையேபோகவிடோம்
தருமாண்டையிப்போது தள்ளிக்கொண்டுபோவோமென்றார்
எட்டுநாள்சென்றாலு மிளங்கொடியேயுன்னைவிடோம்
இவ்வார்த்தைகேட்டுமவ ளேதுசொல்வாள்கட்டுவச்சி
உங்களுக்குகுறி சொன்னு லேதுதரப்போறீர்கள்
தெய்வக்குறத்தியென்று சிந்தையிலேயெண்ணாதே
வீண்குறிகள்சொல்லியே வெறுமையாய்ப்போவேனே
ஏற்றகுறியுரைத்தால் உச்சிதங்கள்தாரோமடி
அல்லாதேயானல் அடங்கலும்பறிப்போமடி
பாலகர்வார்த்தைக்கு பார்த்தாள்மிகமகிழ்ந்து
சந்தோஷமாகியே தையலருமேதுசொல்வாள்

குறம்

(தின) குறத்திதனைவழிமறித்தீர்கூத்தாண்டங்கொண்டீர்
கொஞ்சமல்லவுங்களுக்குக் குரோகிதரேகேளீர்
பிரத்தியல்லநானுனக்கு பேர்மிகுந்தவிஜயன்

பேர்கொண்டபூங்குறத்தி பேசாதேபோடா
கைபார்க்கவேணுமென்றால் கரமதைநீகாட்டாய்
காரியங்களுள்ளபடி வீரியமாயுரைப்பேன் [வாள்
தைத்தலத்தைத்தான்பிடித்துக் கண்ணிலொற்றிக்கொள்
கண்மலரோபெண்மலரோ கைத்தலங்களென்பாள்
குமாரனிடகைத்தலத்தை கூடையின்மேலடித்து
கொச்சியம்மையை நினைத்துக் குலமார்பில்வைத்தாள்
மலையாளத்தஞ்சியே வந்துகுறிசொல்லும்
வள்ளிமலைநாயகியே யுள்ளகுறிசொல்லும்
வடவாசல்காக்கும்நல்ல மண்ணுப்பிடாரி
மனையிடத்துதேவதையே வந்துகுறிசொல்லும்
மஞ்சளழகுகளா மடிச்சிலைகாரிகளா
மகாபூசைவாங்கியுண்ணும் வனத்துநயினரே
பிரியமுடன்குறிகளந்த புத்திரர்க்கருளும்
அலர்மேலுமங்கையம்மாள் அன்புகுறிசொல்லும்
இச்சையுள்ளதேவதைக ளனைவோருமாக
கொச்சைக்குறத்தியிட கூடைதனிலமர்ந்து
குறிக்கோலைமுன்னடத்தி குறிகள்மிகவுரைக்க
குமாரரிடநெஞ்சமது மிகமகிழவேதான்
தெய்வங்களைநினைத்தாலே சிலிர்த்துகொள்ளுமிடப்பு
திரேகமெல்லாமயிர்க்குச் சிடுகுதடாதம்பி
வாடைமணம்வீசுதடா மயில்வந்தாப்போலே
மயக்குதடாஎன்னுடம்பு சன்னதங்கொண்டாற்போல்
அசல்விழிதுடிக்குதடா குறிகளுரைப்பேன்கேளும்
அருச்சுனனுடைவருக்கும் புத்திரரும்நீரே
அல்லியரசாணியிட பிள்ளைகளும்நீரே
தனஞ்செயற்கும்இரட்டையற்கும் புத்திசரும்நீரே
மனதில்வந்தபெண்கொடிக்கு மைந்தரும்நீரே
முன்னடந்தகாரியங்க ளொன்றுரைப்பேன்கேளும்
மாயவனாருகில் துரியோதிரனும்வந்து
அபிமருக்குயென்றிருந்த ஆயன்மகளாரை
அன்பானலக்குணற்குச் சுந்தரியைக்கேட்டு
எம்பெருமாள்மகளாரைப் பரியதுபொருந்த
எழுநூறுவொட்டகப்பொன் யீந்தானேதுரியன்
அந்தப்பொன்னையவர்கள் பதரெனவேதூற்றி
அளவிலாதிரவியத்தை அவரெடுத்துக்கொண்டார்

உபாயமாமுகூர்த்தமிட்டு உலகளந்தமாயன்
இன்றெட்டா நாளையிலே இசைந்துவரச்சொல்லி
இயல்வீமராஜரண்டைத் தூது நடந்தாரே
பார்ப்பானைப்போல்வந்து அபிமனுடன்சொல்லி
படைபொருந்திமணங்கள் செய்வகைள் நினைத்தாரே
அரவானுந்தொந்திசெட்டி கடோற்கஜனபிமன்னன்
அரசன் துரியோதிரனுர் அவர்தளத்தில்புகுந்தார்
ஒருநொடியில்துரியோதிரன் சபையில்மன்னர்மடிய
புரவிகாந்திரர்மடிய ரதமொடியப்பொடியாய்
சிலைமுறியவரை நடங்க துரியோதிரனுடனே
வந்துன்னைவதைகள்செய்து சக்கிரகிரியையுருள
துரிதமுடன்வீற்றிருக்குஞ் சுந்தரியையுருள
குறிகளதுபொய்யடா கொற்றவனேயென்று
கொச்சியம்மையாணையென்று கூடையின்மேலடித்தாள்
பொய்யோடா!யென்குறிகள் மெய்யோயிதுபுகல்வீர்
புண்ணியனே அல்லியிட புத்திரனேயென்ருள்
என்றவனைத்தான்பார்த்து விழியாலேமிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடைதுவள நகைத்தாள்

பிள்ளைகள் குறத்திசொன்ன குறிக்குச் சந்தோஷித்துத்
தாங்க ளணிந்திருந்த ஆபரணத்தைக் கொடுத்தது

வேறு

வாடிமலைக்குறத்தி வண்ண நடைகட்டுவச்சி
ஆச்சியர்தன்னுடைய ஆபரணமானதெல்லாம்
திருடிவந்தாயென்றுசொல்லி திட்டினேம்வைதோமே [மென்ரேம்
தெய்வக்குறத்தியம்மா தெளிவானகட்டுவச்சி
கன்னமிட்டாயென்றுசொல்லி கட்டுமென்ரேம்வெட்டு
கண்டதுகண்டாற்போல் கட்டுவச்சிசொல்லிவிட்டாய்
பார்த்ததுபார்த்தாற்போல் பாங்கய்குறியுரைத்தாய்
அறியாமற்செய்தகுற்றம் ஆச்சிமனம்பொறுக்க
தெரியாமற்செய்தகுற்றம் சிந்தையிலேவையாதே
என்று-பாதம்பணிந்தார்கள் பாலர்சிறுவரெல்லாம்
அவரவர்களிட்டிருந்த ஆபரணமுள்ளதெல்லாம்
ஆரஞ்சரப்பளியும் அழகுமுத்துத்தாழ்வடமும்
முத்தின்கடுக்கனும் முருகுடனேமோதிரமும்
கழற்றியேமுன்னேவைத்துக் காலில்விழுந்தார்கள்

எடுத்துப்போமாச்சியென்று எல்லாருந்தெண்டனிட்டா
வண்ணக்குறத்தியவள் வாய்திறந்தேதுசொல்வாள் [ர்
வாருங்களென்மகனே வார்த்தையொன்று நீர்கேளும்
நீங்கள்-திட்டினதுவைததுவும் தெத்திவில்லாலெய்த்து
அத்தனையுமெந்தனுக்கு அதிபிரியங்காணுமடா [வும்
பார்த்தன்துரையாலே படைமன்னு நீங்களெல்லாம்
வாய்த்தான்மதன்காணும் என்றுள் மலைக்குறத்தி [து
ஆபரணந்தானெடுத்து அனைவோர்க்குந்தான்கொடுத்
பதியோடிருங்களென்று பாலகரேபோங்களென்று
அந்தத்தெருகடந்து அப்பாலேபோகலுற்றுள்

குறத்தி வரும்போது பிராமணுள் இச்சித்தது

மற்றொருவீதியிலே வாருள் மலைக்குறத்தி
பிராமணர்வீதியிலே போகலுற்றுள்கட்டுவச்சி
மாடப்புருபோலே மயில்போலேதானடந்தாள்
அந்தப்பிராமணர்கள் அவளழகைக்கண்டார்கள்
வந்தபிராமணர்கள் மெல்லியரைக்கண்டார்கள்
மையல்பெரிதாகி மயங்கியவராடிவந்தார்
சிவத்தைமறந்தார்கள் சிவத்தொழிலைத்தான்மறந்தார்
பூசைத்தொழில்மறந்தார் புட்பமெடுக்கசைந்தார்
தவத்தைமறந்தார்கள் தவத்தொழிலைத்தான்மறந்தார்
ஞானமறந்தார்கள் நற்பூசையும்மறந்தார்
கிழங்கள்பழங்களெல்லாங் கிட்டிவந்துபல்திறந்தார்
குடுமிவிடுவித்தவர்கள் கொப்பெனவோடிவந்தார்
கண்ணுக்குத்தெண்டமென்பார்காலுக்கடிமையென்பார்
வாடிமலைக்குறத்தி மாளிகைக்குகொண்டுபோறோம்
மெத்தையின்மேல்வைக்கிறோம் வேணபணிபூட்டுகிறோ
ஆபரணந்தரித்து அலங்கரித்துபார்த்திருப்போம் [ம்
பெண்டுகளுள்ளவரை பேணிதொழில்செய்பவைப்போம்
ஆணுய்ப்பிறந்தவர்கள் அடிமைத்தொழில்செய்வோம்
ஊழியங்கள்செய்திடுவோம் உத்தமியேவாரீரோ
கண்ணுக்குத்தெண்டமென்பார்காலுக்கடிமையென்பார்
வாடிகுறத்தியென்பார் மையல்பெரிதாகுதென்பார்
காமக்கணையாலே களைதாங்கிப்போகுதென்பார்
மாரனவனெய்தகணை மார்பைப்பிளக்குதென்பார்
மோகனசிங்கமது முகத்தையழிக்குதென்பார்

ஆறுருகுபாணமது மாருருகிப்போகுதென்பார்
அரைநாழியெங்களுடன் அணைந்திருந்துபோடியென்
சுத்தினர்மாதரைச் சூழ்ந்தார்குறத்தியரை [பார்
வண்ணக்குறத்தியவள் வாய்திறந்தங்கேதுசொல்வாள்

### குறத்தி பிராமணனுக்குச் சொல்லும் குறம்

(தின) கொச்சிமலைகுடகுமலை குடியிருக்குங்குறத்தி
கொக்குவக்காவுகளும் குட்டிகறிசமைப்போம்
பச்சைமலைபவழமலை குடியிருக்குங்குறத்தி
பன்றிகளுமானுகளுங் கறியாக்கித்தின்போம் [வோம்
காக்காய்தின்போங்கழுகுதின்போம் காட்டேனுஞ்சுடு
கள்ளுவைத்தால்குடங்குடிப்போம் கானகத்துசாதி
காட்டானைசிங்கங்களும் கரடிபுலிதின்போம்
காட்டிலேகுடியிருப்போம் கள்ளக்குறச்சாதி
எச்சானசாதியல்ல எங்கள்குலசாதி
ஆமைதின்போம்கிரிதுன்போம்அணிலடித்துச்சுடுவோ
பூனைகுத்திவிருந்திடுவோம் புனக்குறவர் நாங்கள் [ம்
நுழைநரியும்மரநாயும் வெள்ளையெலிதின்போம்
குறைச்சாதியானதெல்லாம் அரைசாதி நீகண்டாய்
கொச்சைகுறநாற்றமது குமட்டலையோவுனக்கு
என்னை-கூடியணையமனந் தோணுதேவேதியரே
என்றவளைத்தான்பார்த்து விழியாலேமிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடைதுவள நகைத்தாள்

### வேறு

வாருங்கள்பிராமணரே வார்த்தையொன்று நீர்கேளும்
என்னைவைத்து ஆதரிக்கும் வேதியருமானுலே
சிற்றடைமார்வீதியிது தெருக்களெல்லாந்திரிந்து
கொம்பனைமார்வீதியெல்லாங் குறிகள்சொல்லிவாரேனே
பாடிவருகிறேன் பத்தினிமார்வீதியெல்லாம் [யா
நாளைவருகிறேன் நாயகரே நம்புமென்ருள்
அத்தெருவுவீதிவிட்டு அப்பாலேபோகலுற்ருள்
ஏக்கத்தாற்போலே யிருந்தார்பிராமணர்கள்
மையல்பெரிதாகி மதிமயங்கிநின்றுவிட்டார்
அப்போகுறத்தியவள் அலங்காரக்கட்டுவச்சி
வீதியும்வீதி தெருவும்பலகடந்து

குறத்தி மின்னொளி வீதி வந்தது

விளங்கியசீர்மாதவத்து மின்னிடையாள்வீதியிலே
பாடிவருகிருள் பத்தினியாள்வீதியிலே
கூறிவருகிருள் குறமாதரைப்போல
உறிகொள்வீர்காம்புகொள்வீர் கோரோசனையுண்டைகொள்வீர்
குழந்தைகள்விளையாடக் கிலுகிலுப்பைக்கொள்வீர்
பச்சைமணிகொள்வீரோ பருஞ்சிலங்கைகொள்வீரோ
நரைபோயிளமைவர நல்லமருந்துண்டைகொள்வீர்
வாழாதபெண்களுக்கு வாழ்மருந்துண்டைகொள்வீர்
சேராதபெண்களுக்கு சேரமருந்துண்டைகொள்வீர்
கூத்திகளுக்காக மருந்துகொள்வீர்கொற்றவரே
வேசிக்கிடுமருந்து கொள்வீரோவேந்தர்களே
கைபார்ப்பேன்குறியுரைப்பேன் காரியங்களுள்ளபடி
கூடைமுறங்கட்டுகிறேன் குறிகள்மிகவுரைப்பேன்
பச்சைபொட்டுக்குத்தலையோ பைங்கொடிமாதர்களே
என்று-பாடிவருகிருள் பத்தினிமார்வீதியெல்லாம்
விளங்கியசீர்மாதவத்து மின்னிடைவாசலிலே
கார்த்திருக்குந்தோழிமார் கன்னியர்கள்கேட்டுவிட்டார்
ஆச்சி-வாழ்ந்திருக்கிருள் மாதுநெடுநாளாக
கூடாதிருக்கிருளே கோதுநெடுநாளாக
அவள்-மன்னன்வருங்குறியைச் சொல்வாள்மலைக்குறத் [தி
பிச்சைகுறிபொய்யாது மெய்யாகுமாச்சியரே
நம்மிட-ஆச்சியற்குசொல்வோமென் ருரணங்குமோடிவந்தாள்
விளங்கியசீர்மாதவத்து மின்னிடைக்குதெண்டனிட்டா [ர்
ஆச்சியரேகேளீர் அடியேன்வாய்விண்ணப்பம்
காணுவதிசயங்கள் கண்டேனுன்வீதியிலே
தெய்வக்குறத்தியவள் தெளிவானகட்டுவச்சி
மின்னிற்பிறந்தவளோ மேகவர்னர்மச்சினியோ
கன்னிதிருப்பாற்கடலில் வந்துதித்தகருவிளமோ
எழுதவொண்ணுவடிவழகி யிவ்வீதிபாடிவந்தாள்
கைபார்த்துகுறிசொல்வாள் கட்டுவச்சிநாயகியாள்
மன்னன்வருங்குறியைச்சொல்வாள்மலைக்குறத்தி
பிச்சைக்குறத்திகுறி பொய்யாதுமெய்யாகும்
அகத்தினிலுள்ளாக அழைக்கத்திருவுளமோ [யாள்
இவ்வார்த்தைதான்கேட் டேதுசொல்வாள்மின்னிடை

புதுமைபுதுமையிது பொற்கொடியேயுன்பேச்சு
இதுபுதுமைகாணும் இளங்கொடியேயுன்பேச்சு
நானும்மனுஷியோ நாட்டிலேயுங்கூட்டுறவோ
என்மனதில்குறைகளென்ன வாடிமயங்கிறதேன்
துக்கத்துயரமென்ன சிறையிருக்குந்தன்மையென்ன
நான்-நாலுபேரைப்போல நலமாகவாழ்கிறேனே [லே
அத்தனையும்போட்டுவைத்துக் கைபார்த்துக்கொண்டா
நகையாரோ நம்மையிந்த நாட்டிலுள்ளபெண்களெல்
வாழ்கின்றபெண்களெல்லாம் மாதே நகையாரோ [லாம்
மனங்களித்தபெண்களெல்லாம் தாழ்வுகளைச்சொல்லா
எழுத்துப்படியுனக்கு யிட்டுமிருந்தாலே [ரோ
கட்டுவச்சியென்செய்வாள் காரிழையேபோடியென்றாள்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியவள்கூறுவாள்
இப்புவியில்வந்ததெகரு இளங்குறத்திதானுமல்ல
தெய்வக்குறத்தியவள் செம்பொன்மலைக்குறத்தி
மந்திரமுந்தந்திரமும் வண்ணமருந்துண்டைகளும்
இந்திரஜாலவித்தை யெல்லாமறிந்தாள்காண்
அவள்வந்துகைபார்த்தால் மனதில்குறைதீரும்
பார்த்தர்வரும்படி பகரவல்லாள்பைங்கிளியாள்
வாள்விஜயனிங்கேதான் வருங்குறியைச்சொல்லவல்லா
ஆச்சிகுறத்தியரை அழைக்கச்செலவருளும் [ள்

மின்னொளியாள் வீட்டுக்குக் குறத்தி வந்தது

விளங்கியசீர்மாதவத்து மின்னிடையுங்கூறுவாள்
வாழாதார்வாசலுக்கு வருவாளோகட்டுவச்சி
அதனாலழையுமென்று அன்னநடைமாது
சிறைச்சாலைமண்டபத்தே தேன்மொழியாள்விட்டெழு
அலங்காரமண்டபத்தி லாரணங்குவந்தமர்ந்தாள் [ந்து
அப்போதுதாதிமா ராரணங்குமோடிவந்து
வாடிகுறத்தியெங்கள் மாதுவழைக்கிறாள்
எங்களாச்சியற்குகைபார்க்க ஆரணங்கேவாருமென்றாள்
தாதியழைக்கையிலே சந்தோஷமாயவளும்
வந்தேன்வந்தேனென்றுசொல்லி மலைக்குறத்திவுள்நுழைந்தாள்
இந்திரக்கட்டுவச்சி யேத்தமுள்ளபூங்குறத்தி
மந்திரக்கட்டுவச்சி மலையாளப்பூங்குறத்தி
வண்ணக்குறத்தியவள் மலைக்குறத்திவுள்நுழைந்தாள்

ஓடகலர்க்கண்ணாளும் உள்வாசல்போய் நுழைந்தாள்
அல்லியிற்பிறந்தாலும் அனலிற்பிறந்தாலும்
இருவரனுப்பிவைத்த இளங்கொடிதாதியரும்
மின்னிடையாள்வாசலுக்கு விசையனார்போனபின்பு
அன்னநடைமாதர் அவர்திருப்பியோடிவந்தார்
அல்லியற்குந்துரோபதைக்கும் ஆரணங்குதெண்டனிட்
பார்த்தன்பிறகாகப் போனானேமைபைங்கொடியே [டு
கண்டமுடிமன்னர் கனத்தமயலானார்
தெண்டனிட்டுப்பார்ப்பாரும் சேவித்துநிற்பாரும்
சுபத்திரையாள்வாசலிலே தாதியழைத்ததுவும்
பள்ளிக்கூடத்துப் பசங்களிழுத்ததுவும்
பண்ணுதும்பண்ணியவர் பங்கமழித்ததுவும்
கொன்றைக்குறத்தியைப்போல் குறிகளுரைத்ததுவும்
மின்னிடையாள்வாசலுக்கு விசையனார்போனதுவும்
ஒன்றுமொளியாம லுரைத்தார்கள்தாதியர்கள்
இருவருங்கேட்டார்க ளின்பங்கரைபுரண்டு
சந்தோஷமானார்கள் சரீரமதுபூரித்தார்
அன்னநடைமின்னிடைக்கு அனந்தஞ்சிறைதீர
எத்தனைநாட்சென்றது இளங்கொடிமின்னிடைக்கு
இத்தனைநாளு மிகுந்தகுறைதீர
மன்னவனைநன்றாய் மனமுகந்தணையவல்லாள்
கூடியணைந்திடுவாள் குறைகளைத்தீர்த்திடுவாள்
அன்று-குங்குமத்திண்டோளன் குலுங்கநகைநகைத்து
சிவிகையின்மீதேறி தேன்மொழிமார்போகலுற்றார்
மையெழுதாக்கண்ணனும் மலர்ச்சொருகாகேஷயமும்
பாக்குதின்னாவாயும் பத்தினியாள்தன்முகமும்
வெற்றிலைதின்னாள் விரும்பாய்விடாமுகமும்
மஞ்சளணுகாத வடிவுடையாள்மார்பழகும்
என்தேவியாயிருந்து இவள்சிறையாவானேன்
இவள்பொன்னனமேனியது புழுதிபடக்காரணமேன்
தங்கத்திருமேனி தழும்புபடக்காரணமேன் [கன்னி
இவள்-வாய்மதத்தினாலேயல்லோ வாழ்விழந்தாள்மாது
என்று-பொங்காரமெல்லாம் அடங்கியொருபுறமாய்
சிங்காரக்கட்டுவச்சி போலேசிரித்துவந்தாள்
மங்கையரைப்பார்த்து உரைப்பாள்மலைக்குறத்தி

மின்னொளியைப் பார்த்துச் சொல்லுங் குறம்

தின-திருந்தமதிமுகத்தாளே மின்னொளியேகேளும்
உன்-செம்பொன்மணிமாளிகைக்கு சேயலரவாச்சே
தலைப்புறத்தில்கெவுளிநின்று சொல்லுதடிபெண்ணே
மனைக்குறியான்வாழ்விஜயன் வருவாண்டிபெண்ணே
மனைக்குறியான்வாழ்விஜயன் வருவாரேயானால்
எனக்குநல்லகறிசோறு யிடுவாயடிபெண்ணே
ஆக்கினசோறுகறி பாக்குமெனக்கருள்வாய்
அருகட்டுச்சேலைமுழம் பழந்துணியுந்தருவாய்
அருளுஞ்செல்வமுண்டுவுந்தன் மணாளன்வரப்போறான்
ஆறுமுகவன்றிருவருளா லாளன்வருவாண்டி
பேறுமுண்டுபெருமையுண்டு பெண்மயிலேகேளாய்
பெருவயிரன்திருவருளால் புருஷன்வருவாண்டி
இந்திரன்குமாரனவன் சந்திரமுகத்தாண்டி
இந்நேரம்வரப்போறான் இளமயிலேகேளும்
நல்மருந்துகுளிசமிது நாயன்மூடிபெண்ணே
கைமருந்துகடுவுமெத்த கரையுமோடிபெண்ணே
விற்பொருதும்விழியாளே மின்னொளியேகேளாய்
அக்குமணிகொக்குமணி கொள்வாயடிபெண்ணே
கந்தருக்கும்வள்ளியற்கு மூகந்தகுறிசொல்ல
ஏத்தகுலசோழவள நாட்டுக்குறத்தியைப்போல்
இச்சைகொள்ளவகையறியேன் ஈஸ்வரனாரறிய
வக்காவும்கொக்காவும் தின்கிறவளல்ல
வம்புபேசிமனைதோறும் போரவளுமல்ல
கைபார்ப்பேன்கண்டுரைப்பேன் கடுகிவனம்போறேன்
கறிசோறுதுகிலாடை கடுகிவனம்போலே
மெய்குறிகள்நானுரைப்பேன் மின்னிடையேகேளாய்
கைக்குழந்தைவுச்சிக்கெண்ணை குத்துளிவார்ப்பார்
இந்தநாட்டில்வாழுகிற குறத்தியல்லபெண்ணே
எப்போதுமிந்திரற்கும் கைபார்க்குங்குறத்தி
இந்தநாடுயெங்களுக்குப் பொன்னாடுகண்டாய்
என்னாணைஉன்னாணை யென்றவளுமுரைத்தாள்
அல்லியர்க்கும்துரோபதைக்கு மன்புகுறிசொன்னேன்
அவர்கள்மெச்சியெந்தனுக்கு ஆபரணங்கொடுத்தார்
உச்சிதமாய்குறியுரைத்தேன் மெச்சியவரெனக்கு

அவர்பிறத்த நாளையிலே அழுத்தியதோர்பக்கம்
ஆபரணந்தான்கொடுத்து அனுப்பினர்பெண்ணே
மின்னிடையாளெந்தனுக்கு மிகவுங்குறியுரைத்து
மிகவுமவர்குறத்தியென்று மிகவெனக்குமுரைத்தார்
நன்ருகயுன்மனைக்கு நான்வரும்போது
நல்முகூர்த்தஞ்சொல்கிறது எண்ணத்தொலையாது
வாசல்பல்லிபளபளென்று நேசத்துடன்சொல்ல
வருவாண்டியுன்கணவன் வள்ளியம்மையருளால்
குவிமுலையாளேயென் குறிகளும்பொய்யாது
கொச்சியம்மையாணையென்று கூடையின்மேலடித்தாள்

வேறு

விளங்கியசீர்மாதவத்து மின்னிடையுங்கூறுவாள்
ஏதடிகட்டுவச்சி எந்தநாடுந்தனது
எந்தவூருங்களது எனக்கறியச்சொல்லுமென்ருள்

மலைக்குறத்தி தன் வரலாறு சொன்ன குறம்

(தின) எந்தனிடதிருநாடு கேட்கிறையோபெண்ணே
ஏத்தமுள்ளயிந்திரனு ராஜுமெந்தநாடு
கொங்குவங்காளமது எங்களிடநாடு
வங்காளம்சிங்காளம் மராட்டியமெங்கள் நாடு
வாள்விஜயன்பெயர்கொண்ட குறத்தினுன்பெண்ணே
எங்களிடதிருநாடு கேட்டையோபெண்ணே
மேனகைக்கும்ஊர்வசிக்கும் அதிகமுள்ளபெண்ணே
சந்திரர்கள்சூரியர்க ளுதிக்குமெந்தநாடு
தானதருமம்புரியுந் தவமுள்ளநாடு
அன்னக்கொடிநின்றிசையும் எந்தனிடநாடு
அதிசயமாய்வாழ்கிறதும எந்தனிடநாடு
அதில்-துரும்பசையத்தேன்சொரியு மெந்தனிடநாடு
கரும்புவிளாசோலைசூழு மெந்தனிடநாடு
விரும்புமுல்லைமணஞ்சூழு மெந்தனிடநாடு
வேலருடன்வள்ளியம்மை வாழுமெந்தநாடு
பச்சைமலைபவழமலை எந்தனிடநாடு
பசிகாலமானதே பழங்கூறிவருவோம்
கொச்சிமலைகுடகுமலை எந்தனிடநாடு
குளிர்காலமானதே குறம்பாடிவருவோம்

பஞ்சவர்களாளுவது மெந்தனிட நாடு
பார்த்தனென்றுபேர்கொண்ட குறத்தி நான்வெண்ணே
கச்சணியுமுலையாளே கனகரதியாளே
கைத்தலத்தை நீர்காட்டாய் கனத்தகுறிசொல்ல
என்றவளைத்தான்பார்த்து யிணைவிழியாள்மிரட்டி
இளங்குறத்திதனைப்போலே யிடைதுவள நகைத்தாள்

வேறு

விளங்கியசிர்மாதவத்துமின்னிடையாளேதுசொல்வாள்
திருமாலவர்பொருட்டால் திருமாதோபூமாதோ
நகர்சோதனைக்காக வந்த நறுமுதலோ
கட்டுவச்சிவீற்றிருக்க வட்டமணையிடுங்கள்
பொற்கொடியாள்வீற்றிருக்கப் பூம்பலகைபோடுங்கள்
வட்டமணைபோட்டார் மணிதடுக்குதான்போட்டார்
வாடிமலைக்குறத்தி வட்டமணைமேலே
வள நாடிகைகாட்ட வனக்குறத்திஉளமகிழ்ந்தாள்
இட்டமுகூர்த்தமது லட்சணமென்றுசொல்லி
இட்டமணைமேலே வந்திருந்தாள்பூங்குறத்தி
ஒருகால்மடித்தாளே ஒருகால்புறத்தணிந்தாள்
கூடையொருபக்கம்வைத்து கொம்பனையாள்தானிருந்
கூறுவாள்கொம்பினது மரத்தின்கிளிபோலே [தாள்

குறத்தி மின்னொளிக்குக் கைபார்க்கும் குறம்

(தின) கனத்ததொருஸ்தனத்தாளே கைதலத்தைக்காட்டாய்
உன்கணவனிப்போவருங் குறியைக்கண்டு நான்சொல்ல
பங்கயஞ்சிர்கைத்தலத்தைப் பார்த்தனுமேபிடித்து
பாவையிடமுகம்நோக்கிப் பலகாலுஞ்சிரித்தாள்
இடக்கரத்தைத்தான்பிடித்து யிளங்கொடியேயென்பாள்
இளங்கொடியாள்கைத்தலத்தை கண்ணிலொத்திக்கொள்வாள்
கண்மலரோபெண்மலரோ கைத்தலங்களென்பாள்
மங்கிலியம்வரம்பெறுவாய் மைந்தர்களைப்பெறுவாய்
பனமகிழகணவனிப்போ வருவாண்டிபெண்ணே
உண்மையெந்தன்குறிகளது வுண்மையிதுபெண்ணே
வண்மையுள்ளசோழனிட மனுநீதியாலே

மதியாமலரசர்களும் மன்னவன்மகளாரே
வாள்விஜயன்மேலாசை தோனுதடிவுனக்கு
கூரானவிழியாளே கொம்பனேயேகேளாய்
கூடுதற்குஆசைமனந் தோனுதடியுனக்கு
பார்த்தேண்டிவுண்மையி லட்சணங்களிப்போ
புவனிமுழுதாளுகிற சோழன்மகளாரே
தகதகெனகைவளையல் கைபிடிக்கநானும்
தயவுள்ளபுருஷனிப்போ வருவாண்டிபெண்ணே
மயலாகிமன துருகி வடிவுள்ளபெண்ணே
நீர்-செயலாகிசெய்தகுறை சொல்லுகின்றேன்கேளாய்
சங்கமரைப்பூசைசெய்யும் வேளைவந்தாரென்று
தனஞ்செயனுர்வருகிறதை தள்ளிவிட்டாய்பெண்ணே
ஈஸ்வரனைப்பூசைசெய்யும் வேளைவந்தாரென்று
எண்ணுமல்விஜயனைத்தான் தள்ளிவிட்டாய்பெண்ணே
அன்றுமுதல்நெடுநாளாய் வாராதவிஜயன்
அறுமுகவன்திருவருளால் வருவானேடிபெண்ணே
என்றவளைத்தான்பார்த்து விழியாலேமிரட்டி
இளங்குறத்திதனைப்போல இடைதுவளநகைத்தாள்

வேறு

விளங்கியசீர்மாதவத்து மின்னிடையுங்கூறுவாள்
முத்தணிந்தபல்லோன் முறுக்கணிந்தசெவ்வாயோன்
உந்திசுழியழகன் உரோமத்தின்பேரழகன்
கூறியமூக்கழகன் குளிர்ந்தமுகத்தழகன்
தொந்தமிடுஆலிலைபோல் துய்யவயிரழகும்
நடையும்நடையழகன் நடக்கிசைந்தஇடையழகன்
காய்க்கும்பிராயமடி கன்னிகட்டுங்காலமடி
பூர்க்கும்பிராயமடி பிஞ்சுவிடுங்காலமடி
கொஞ்சும்வயதல்லவோ கொழுந்தெல்லாம்பிஞ்சல்லோ
சுவரிலெழுதலாஞ் சித்திரம்போல்பார்க்கலாம்
படத்திலெழுதலாம் பதுமைபோல்பார்க்கலாம்
இத்தனையழகான இளங்குறத்திகட்டுவச்சி
சித்திராதிபோலே தெருவீதிவந்தாயே
கொண்டகுறவனுன்னைக் குறிசொல்லவிட்டானே
மதிகெட்டுவிட்டானே மங்கையரேயுன்கணவன்
விட்டுப்பிரிந்தானே வெறியனேயுன்கணவன்

கண்டால்விடுவாரோ காண்டீபங்கொண்டவரும்
அடங்காதழகையெல்லாம் கண்டாலலையாரோ
மானேயுனைக்கண்டால் மற்றொருதேவியரை
மற்றுமொருதேவியரை நத்தியேபோவாரோ
தேன்மொழிமாதர்களைத் திருஷ்டித்துப்போவாரே
என்-வாணுளைவாங்குகைக்கு வந்தாய்மலைக்குறத்தி
என்றதுசொல்லி வுரைத்தாளிளங்கொடியாள்
மாலைக்குயிலாள் மலைக்குறத்திகூறுவாள்

குறம்

(தின) எந்தனிடகுவளமதி கெட்டவனேயென்றாய்
எப்படிஉனக்குக்குறி சொல்வேண்டி நன்றாய்
எங்களிடசாதிகளி லேர்வையிதுதாண்டி
எச்சானசாதியல்லோ எங்கள்குறச்சாதி
சந்திரனோடொத்ததொரு திருமுகத்திலழகன்
தாளம்போலொத்ததொரு தவளம்பூவழகன்
திருகண்களொளியழகன் செங்கனிவாய்சிகப்பன்
இத்தனைக்குமழகான இளங்கொடியேயுன்னை
இதுநெடுநாளுன்கணவன் ஏன்பிரிந்தான்சொல்வாய்
எச்சானசாதியல்லோ எங்கள்குலச்சாதி
இளங்கொடியேயுன்கணவன் ஏன்பிரிந்தான்சொல்வாய்
உங்களிடகுலந்தனிலே யேர்வையிதுதானே
உன்னைப்போல்வாழாதா ருலகத்திலுண்டோ
இக்காலஞ்சிறையிருக்க மிக்கவரைதன்னில்
இளங்கொடியேவாழாம லிருந்ததென்னசொல்வாய்
எங்களிடகுறக்குலத்தி லேர்வையல்லகண்டாய்
இதனாலேபழுதுமில்லை கைபார்க்கநீவா
பங்கயஞ்சீர்முகத்தாளே கைதாராயென்று [வாள்
பைங்கிளியாள்கைத்தலத்தைக் கண்ணிலொத்திக்கொள்
அங்கயஞ்சீர்கைத்தலத்தைக் கண்ணிலொத்திக்கொள்
அவனிமுழுதாளுகிற சோழன்மகளாரே [வாள்
மங்கிலியம்வரம்பெறுவாய் மைந்தர்களைப்பெறுவாய்
வள்ளியம்மைதன்னாணை மயிலவனாராணை
என்றவளைத்தான்பார்த்து விழியாலேமிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இயம்பியவள்சிரித்தாள்

வேறு

விளங்கியசீர்மாதவத்துமின்னிடையாளேதுசொல்வாள்
சிறையிருந்தோமானாலும் தினம்வாழ்ந்தோமானாலும்
வாசற்படியக்கோலம் மற்றோர்மனைபுக்கோம்
வீதிதனிலேதிரியோம் வேல்புருவங்கண்ணாளே
நீ-அடங்காதழகுமாய் ஆசைப்பசுங்கிளியே
வேசையர்கள்போலாக வீதிப்புறப்பட்டாய்
கண்டால்விடுவாரோ காண்டீபங்கொண்டவரும்
பார்த்தால்விடுவாரோ பார்த்தன்வடிவுடையோன்
மாலைக்குறத்தி மலைக்குறத்தியேதுசொல்வாள்

குறம்

(தின) விசையனார்கண்டாலே விட்டுவிடானென்றாய்
மின்னிடைநீயானாலே நாவெழுந்துசொன்னாய்
சிலவிசையன் நீதிமிகு நெறிமுறைதவறான்
திக்குஜெயங்கொண்டவனார் சேவகனார்தமக்கு
மலைபோலுந்தெய்வகன்னி ஊர்வசியாள்ரம்பை
மலைமாதுபோலேவடி வுடையகுணமாது
மயல்கொண்டுஊர்வசியாள் மயங்கியேதான்விழுந்தாள்
மகிழ்பார்த்தன்மாதாவே போமென்றுவிட்டான்
அவன்வடிவுக்கொப்பான அரிவையர்களுண்டோ
ஆனாலுமருச்சுனனார் அவர்நீதிதவறார்
தன்தாரமல்லாமல் பிறர்தாரம்விரும்பார்
குறவையன்மகளேயுன் மதத்தாலேநீயும்
கூசாமல்பயமென்று வூதிவைத்தாயவரை
நிலமையோடுநீயவரை வம்பனென்றுகுறிக்க
நிஷ்டூரப்பாவிகண்டாய் நீலிகண்டாய்நீயும்
கணவனைவேம்பனென்பா ருண்டோடியிவ்வுலகில்
கரியமால்மைத்துனனா ரென்றுமறியாரே
சின்னமலர்குழலாளே மின்னொளியேகேளும்
செம்பொனதுமாளிகைக்கு செபமாகவாச்சே
வலப்புறத்தில்கெவுளிநின்று சொல்லிற்றடிபெண்ணே
மனைக்குறியாவாள்விசையன் வரப்போறான்பெண்ணே
தங்கத்திருமார்புதனில் ஆபரணமேந்தி
சரசமுடனுனையணைய வருவாண்டிபெண்ணே

ஏத்தமுள்ளவிசயனு ரிக்கோவில்வந்தால்
எனக்குநல்லகறிசோறு இடுவாயோடிபெண்ணே
என்றவளைத்தான்பார்த்து விழியாலேமிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடைதுவள நகைத்தாள்

மின்னொளியாள் அருச்சுனன் செய்தகுற்றத்தை
குறத்திக்குச் சொல்லல் வேறு

விளங்கியசீர்மாதவத்து மின்னிடையுங்கூறுவாள்
கொன்றைக்குறத்தியரே கொம்பனையே நீர்கேளும்
நான்-வம்பென்றசொல்லுகளும் மிகவும்பெரிதாச்சே
அவர்வீம்புகளும்சேஷ்டைகளு மிங்கொருவர்கண்டிலே
நான்-நித்தஞ்சிவனையெண்ணி நீதியுடன்பூசைசெய்ய [யே
ஒன்றையொருநாளி லுன்பதஞ்சீர்மண்டபத்தில்
சிவனை நினைந்து நான் சிவபூசைசெய்கையிலே
அரனை நினைந்து நான் குருபூசைசெய்கையிலே
கண்ணிரண்டுமூடியே கையிரண்டுமேந்திக்கொண்டு
சிந்தையில் நானினைந்து சிவனை நிலைநிறுத்தி
பூசைசெய்யும்வேளையிலே போர்விசயர்வந்துவிட்டார்
அவ்வளவில்பார்த்தான் அவர்முடுகியோடிவந்தார்
வேளையிதுகூடுகைக்கு மின்னிடையேயென்பதுவும்
நாளைவருமோயிளமை நாயகியேயென்பதுவும்
கண்ணேவிழியாயோ கட்டழகியென்பதுவும்
ஒன்றாகப்புல்கி யுறவணைவோமென்பதுவும்
கக்கட்டம்பண் ணுறதும் சற்றேநகைக்கிறதும்
கைகொட்டியாடி நகைத்தாண்டிகாவலனும்
கோபித்துகண்சிவந்து கொற்றவனைப்பார்த்துவிட்டே
சீரியகோபமதாய் விஜயனைப்பார்த்துவிட்டேன் [ன்
அவர்-பல்லழகும்பாவனையும் பார்த்துமயங்கிவிட்டேன்
மீசைமுறுக்கழகும் விழியில்கருப்பழகும்
கச்சுகட்டுவுள்மருங்கும் கத்திச்சுருப்பழகும்
வில்லழகும்கண்டுநான் விழுந்துக்கொடுத்தேண்டி
சிவனைமறந்தேன் சிவபூசைநான்மறந்தேன்
வழிப்படுமைந்தெழுத்தை மாதேமறந்துவிட்டேன்
செபிக்கும்செபமறந்தேன் சிந்தையிலேமெய்மறந்தேன்
தேன்மொழிமாதே நான் சிவனைமறந்துவிட்டேன்
ஆனதால்வம்பனென் றும் உரைத்தேன்விருதோசை

மின்னிடைக்குவேண்டாத வம்பனென்றுவூதிவைத்தே
அன்னமேகட்டுவச்சி ஆர்மேலேநோவமடி
என்னைப்போல்பெண்பிறந்தா யிவ்வார்த்தைசொல்லடி
எனக்குபுருஷனுண்டோ உத்தமியேசொல்லடிநீ [நீ

மின்னொளிக்கு புத்திசொன்ன குறம்

(தின)அன்னமேஉன்னிடையே ஆரணங்கேநீகேளாய்
அறிந்தபடிசொல்கிறண்டி நெறிமுறைமையாக
வனத்தமலரெடுத்தாலும் அரனைத்தொழுதாலும்
மகிழவொருநோன்பதனை நோர்த்தாலுமாதே
நிட்டையோடிருந்தாலும் நீதிவானானாலும்
நெறியானசிவபூசை நீர்பண்ணினாலும்
கணவனார்தானாக வலியவந்தழைத்தாலும்
இதனுமிந்தவுலகிலுள்ளாரெல்லோர்க்குஞ்சொல்வேன்
ஏழையானாலுங்கணவ ரிருந்தானேயானல்
பின்னையொருதெய்வமென்ன ஒருசந்திதானென்ன
பிதிர்க்கணங்கள்கோவிலுகள் புகுவதுதானென்ன
எல்லாமுநீரேயென் றியங்கியேதொழுதால்
எல்லாம்பணிசெய்தவரே தேவரறியாரே
நல்லநாளுமேயென்பார் சீதேவியரையும்
நன்மைமிகுந்தவளு மொருபத்தினியுமாவார்
சல்லாபசம்பூரித மைந்தர்களுமுண்டாம்
தையலரேநீருமிட்ட சாபங்கள்பலிக்கும்
பொல்லாங்குபோக்கடிக்கும இனிமேலுஞ்சொர்க்கம்
பூமியிலேயுண்டுகண்டாய் பொய்யல்லடிமாதே
விஸ்தாரம்பேசிடுவார் கணவனைநிந்திப்பார்
வெறியனுக்குமனையாட்டி யாகினேனென்பார்கள்
சற்றேயசட்டனாய் வீட்டுக்குள்ளேயிருந்தால்
தங்களிடஅதிஷ்டமென்று தாமுமறியாரே
பத்தாவைநொந்தவர்கள் பித்தாகச்சமைவார்
பரமனிடதன்னருளால் மயிலவனாருளால்
சத்தியங்காணிவ்வார்த்தை யுனக்குமட்டுமல்ல
இத்தரணியில்வாழ்பெண்களுக்கு மனைவோர்க்குஞ்சொல்வேன்
அன்னமெனுமின்னிடையே ஆரணங்கேகேளாய்
அறிந்தபடிசொல்லுகிறே னெறிமுறைமையாக
வானஸ்தனந்தான்குழையு மருவியுன்னையணைய

மன்னர்வரும்போதாச்சு மின்னிடையேகேளாய்
மகுடமுடிமன்னரிப்போ வருங்குறையைச்சொல்வேன்
விகடமொன்றும்வாராமல் விநாயகரைத்தொழுவேன்
பகடியொன்றுஞ்செய்யாத பாவையர்களரசே
கபடில்லைமுறத்தில்முத்து கடுகவிசைந்திடுவோம்
முத்தாலேமிகப்பரப்பி குறியுரைப்பேன்பெண்ணே
வித்தானகணவனிப்போ விரைந்தோடிவருவான்
என்றவளைத்தான்பார்த்து விழியாலேமிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடைதுவளநகைத்தாள்

### மின்னொளியாள் புருஷன் வரங்கேட்டது வேறு

விளங்கியசீர்மாதவத்து மின்னிடையுமேதுசொல்வாள்
எண்ணறவோதி எழுத்தரப்படித்தாலும்
பெண்மதியாலேயல்லோ பிழைமோசமாகிறது
மன்னன்வருங்குறியைச் சொல்வாய்மலைக்குறத்தி
விஜயன்வருங்குறியைச்சொல்வாய்நீமெல்லியரே [தாள்
கூடையிலேமுத்தளந்து கொண்டுவந்துமுன்னேவைத்

### குறத்தி அருச்சுனன் வருகிறதாய்ச் சொன்ன குறம்

(தின) கனகக்கும்பமுலையாளே கன்னியரேகேளாய்
கணவனிப்போவருங்குறியைக் கண்டுநான்சொல்ல
கருணைவல்லிதாயேநீ உண்மைசொல்லவேணும்
கந்தரேயெந்தனுக்கு முன்னடக்கவேணும்
முத்துகளைமிகப்பரப்பி விழியாலேசிமிட்டி
மெத்தமெள்ளமின்னிடைக்குக் காமவிடாய்தீர
அருச்சுனனரிவளைவந்து அணைவதுமெய்யானல்
நச்சுமலைகொச்சியம்மை நடக்குங்குறிசொல்லு
குற்றமறயெந்தனுக்குச் சற்றேகுறிசொல்லு
என்றவளைத்தான்பார்த்து விழியாலேமிரட்டி
இளங்குறத்திதனைப்போல இடைதுவளநகைத்தாள்

### வேறு

வாராய்நீமின்னிடையே வார்த்தையொன்றுநீகேளும்
கூடையிலேமுத்தளந்து கொண்டுவாமின்னிடையே
நினைத்தகுறிவோடவில்லை நேரிழையேயெந்தனுக்கு
கண்டுகுறிசொல்லிடுவேன் கடுகமுத்தெடுத்துவாராய்

என்றதுதான்கேட்டு எதுசொல்வாள்மின்னிடையும்
முத்துமுத்தென்கிருய் நத்தியேகேட்கிருய்
மெத்தாசைப்படுகிருய் வீணியடி நீகுறத்தி
நச்சுநச்சென்கிருய் நாயகமேகட்டுவச்சி
என்று-முறத்தாலேமுத்தளந்து முன்னலேவைத்தார்க
சதிராகமிகமெழுகி சாணிபிள்ளையாரும்வைத்து [ள்
அறுகுபுஷ்பஞ்சூட்டி அட்சதைகாப்புமிட்டு
தூபதீபந்தான்கொடுத்துத் தொழுதாள்குறத்தியவள்

குறம்

(தின) குறத்திமுத்தைமிகப்பரப்பி குறியிதுவேயென்பா
கோலவிழியாள்மயக்கி மிகநோக்கிநகைப்பாள் [ள்
ஐங்கரனேமுக்கணனே ஆனேமுகத்தோனே
அருச்சுனனரிக்கோயில் வருவாரோசொல்லும்
மனேயிடத்துதேவதைகள் மகிழுமஞ்சளழகி
மடிச்சீலைக்காரிமுதல் வந்துநிற்கவேணும்
பொங்கள்மிகநயினரும் பொற்கொடியேதெய்வம்
பூவாடைக்காரிமுதல் வந்துநிற்கவேணும்
மண்ணுப்பிடாரிநீ மழுவேந்துங்குறத்தி
வடவாசல்செல்லியம்மை வந்தருளவேணும்
ஆகாயதேவதைக ளையன்பிடாரிகளும்
அலேகடல்கன்னிமுதல் வந்தருளவேணும்
ஏழுகடற்கன்னிமுதல் இளையதஞ்சிமாரு
இன்பமுள்ளகுறியெனக்கு தந்தருளவேணும்
மலேயாளகொச்சியம்மை உந்தனருள்வேணும்
வாள்விஜயனிக்கோயில் வருவாரோசொல்லும்
தெய்வங்களை நினேத்தாலே சிலுத்துக்கொள்ளுதுடம்பு
திரேகமெல்லாம்மயிர்கூச்ச லிடுகிறதேபெண்ணே
வாடைமணம்வீசுதடி ஐவர்வந்தாப்போலே
மாய்க்குதடியென்னுடம்பை சன்னதங்கொண்டாற்போ
கூடைகொண்டுகவியுதடி கோமளமேபெண்ணே [ல்
கோலவிழிதுடிக்குதடி குறிகளிப்போகேளாய்
மங்கையரேகள்ளியிப்போ சொன்னதினலே
வரவேணும்பார்த்தனிப்போ வள்ளியம்மையருளால்
இன்னமரைநாழிகையில் அருச்சுனமகாராசன்
வண்ணமுடனிக்கோயில் வரப்போருன்பெண்ணே

கொச்சக்குறத்தியிட குறிகளும்பொய்யாது
கொச்சியம்மையாணையென்று கூடையின்மேலடித்தாள்

வேறு

விளங்கியசீர்மாதவத்துமின்னிடையாளேதுசொல்வாள்
விசையரிதோவீதிவந்தானென்றீரேமெல்லியரே
விஜயர்வந்தபிற்பாடு மெல்லியரேபோய்விடுவேன்
அந்தப்புறந்திலே ஆரணங்குபோய்நுழைந்தாள்
உள்வாசல்வந்தமர்ந்தாள் பேடைமலர்க்கண்ணாளும்
வண்ணக்குறத்தியவள் வாய்திறந்தங்கேதுசொல்வாள்
இக்கோலமாயிருந்தால் இங்கேவாரான்பார்த்தனவன்
மெக்காலமாகிநீர் மஞ்சனமாடுமென்றாள்
மஞ்சனமாடாதே மங்கையரேநீயிருந்தால்
சென்மத்திலும்வாராண்டி தேர்விஜயனிக்கோயில்

மின்னொளிக்கு குறத்தி ஸ்நானஞ்செய்து வைத்தது

எண்ணெய்கொண்டுவாருமென்று ளேக்திழையாள்கட்டுவச்சி
அருகிருந்ததாதியவள் திடுக்கெனவேதானெழுந்து
பூவெழுதிசித்திரித்துப் பொன்மடலைதானெடுத்து
பூவாசஎண்ணெய்தனை பொற்கொடிமார்கொண்டுவந்தா
வண்ணக்குறத்தியவள் மலைக்குறத்திதானெழுந்து [ர்
மின்னிடைக்குப்பின்னாலே மெல்லியரும்வந்துநின்றாள்
பன்னிரண்டாண்டுமுன்னே பின்னிவிட்டகேடயத்தை
மாணிக்கச்சரடவிழ்த்து மயிரைவிரித்துவிட்டாள்
நீங்கிவகிர்ந்தாளே நெறிமுறையின்படியே
பூவாசஎண்ணெயை எலுமிச்சஞ்சார்வார்த்து
ஆருய்வகிர்ந்தாளே ஆர்க்கத்தலைகீறி
குங்குமவார்குழலை கீல்கொண்டைபோட்டாளாம்
எண்ணெயிடும்போதையிலே இளவிஜயனருச்சுனனார்
தாதிகளறியவென்று தன்னொளியைகாட்டினார்
பல்லொளியைக்காட்டினார் பார்த்தார்கள்தாதியர்கள்
மின்னொளியைப்போலவே பல்லொளியைக்கண்டார்கள்
பரசவீணைபார்த்தலவோ பயந்தார்கள்தோழியர்கள்
கானக்குறத்தியல்ல காண்டீபனருச்சுனர்காண்
குறத்தியென்றுநாமிருந்தோம் கோதண்டபாணியவர்
வண்ணக்குறத்தியைப்போல் வடிவுகொண்டுவந்தாரே [று
பெருமையாய்தானிருந்தால் தெண்டனைகள்நேருமென்

மஞ்சனசாலையமைத்து வைத்தார்கள்தாதியர்கள்
மற்றுஞ்சிலதாதி மடவாரெழுந்திருந்து
செம்பொன்னின்தட்டிலே அரைப்பரைத்துவைத்தார்கள்
சீக்காயும்நெல்லி சிறுபருப்புகஸ்தூரி
பச்சிலைமஞ்சள் பசுமஞ்சளரைத்துவைத்தார்
மற்றுஞ்சிலதாதி மடவாரெழுந்திருந்து
தட்டிவுதயமே தானிணையில்தும்படித்து
எங்குமலங்கரித்துச் சந்தன நீர்தெளித்து
கண்மூன்றுடைய கனவயிரக்கட்டிலிட்டு
மெத்தைபிரித்திட்டு மேலேயணைகோலி
காம்பரிந்தயைங்கலப்பூ கட்டிலின்மேல்சொரிந்து
கால்கோட்டைகைகோட்டை யிட்ட ந்தகன்னியரும்
தங்கத்தலைகாணி சகலாத்துத்தழுவணையும்
சாரத்தலைகாணித் தழுவணையும்போட்டார்கள்
கண்ணுடிசல்லிகட்டி கவரிமான்குச்சுவிட்டு
மல்லிகைமுல்லைகளை வகைவகையாய்த்தூக்கேற்றி
பஞ்சவர்ணக்கிளியைப் பலதிசையும்கட்டினுர்கள்
அத்தர்புனுகுகளும் அள்ளித்தெளித்தார்கள்
கதம்பகஸ்தூரியும் கரைத்துத்தெளித்தார்கள்
சாம்பிராணிப்புகைபோட்டார்சந்தனப்புகைகொடுத்தார்
பஞ்சணையைச்சேர்ந்தார் பாங்கியர்களானவர்கள்
மற்றுஞ்சிலதாதி மங்கையர்களோடிவந்தார்
மஞ்சனச்சாலை சமைந்ததென்றுதெண்டனிட்டார்
அப்போதுகுறத்தியவள் அலங்காரமாயெழுந்து
மஞ்சனச்சாலைக்கு வாருமென்ருள்மின்னிமையை
ஸ்தானங்களாட்டிவைக்க சற்றேயெழுந்திரென்ருள்
விளங்கியசீர்மாதவத்து மின்னிடையுங்கூறுவாள்
குறத்தியுடைமையாலே குளிர்த்துமுழுகுவேனே
அத்தண்டதாதியர்க ளனைவோரும்யோசனையாய்
அவரவர்தம்பணிக்கு அனைவோரும்நடந்தார்
சிறிதுபேர்தாதியர்கள் சீக்கிரமாய்நடந்து

**தாதிகள் அவாளவாள் வேலையைச் சர்க்கிரதையாய்ச் செய்தது**

கோலமடப்பள்ளியைக் குச்சிட்டுத்தாள்திறந்து
எங்குமலங்கரித்துச் சந்தன நீர்தெளித்து

அடுப்புமெழுகுவார் அட்சதைக்காப்பிடுவார்
பானைகழுவிப் பனிநீருலைசாய்ப்பார்
பத்துவிதக்கறியும் பதினெட்டுபச்சடியும்
போதச்சமைத்தார்கள் பொற்கொடிமார்தாதியர்கள்
மற்றுஞ்சிலதாதி மங்கையர்களோடிவந்து
வெள்ளிக்கிடாரத்தில் வேண்டியநீர்வார்த்து
பாண்டந்தொடலாமோ பங்கயஞ்சீர்கண்ணாளே
கண்டார்நகையாரோ கலியுகத்தாரேசாரோ
சற்றேயிருகுறத்தி ஸ்நானஞ்செய்துவாறேனென்றாள்
வண்ணக்குறத்தி மலைக்குறத்தியேதுசொல்வாள்
அல்லியிற்பிறந்தாட்கும் அனலிற்பிறந்தாட்கும்
இருவருக்குங்கைபார்த்து ஸ்நானங்களாட்டிவைத்தேன்
தாதிமார்தோழிமார் தையல்மாரில்லாமல்
தனியாகநானிருந்து ஸ்நானஞ்செய்துவைத்தேனே
அவர்களைப்பார்க்கிலும் ஆரணங்குநீபெரிதோ
விஜயன்வருகிறதை மெல்லியரேபார்க்கிறேன்
ஆளன்வருகிறதை அறிகிறேண்டிமின்னிடையே
கூடையெடுத்தவளும் எழுந்தாளேகொம்பனையாள்
வாடிகுறத்திநீ மனதுசலியாதே
மனதுக்கிசைந்தபடி செய்வாய்நீவாடியென்று
மஞ்சனச்சாலையிலே வந்தாரிருவருமாய்
அத்தண்டதாதியரும் அப்புறத்திற்போனார்கள்
அடியார்கள்போனபின்பு அக்குறத்திமாதருமே
மஞ்சனச்சாலை மணிக்கதவைத்தாள்போட்டாள்
பட்டாடைவாங்கியே பலபணியுந்தான்கழட்டி
சிற்றாடைவாங்கியே சிறுபறையுந்தான்கழற்றி
நாற்காலின்மேலாக நாயகியைத்தானிறுத்தி
சிக்காயுநெல்லி சிறுபயருந்தானெடுத்து
ஆனந்தமாரிக்கு அரப்பிட்டுநீராட்டி
பச்சிலைமஞ்சள் பசுமஞ்சள்தானெடுத்து
கொம்பனையாள்முகத்திலேயுங் குங்குமமாரிலேயும்
மேல்விழுந்துமேல்விழுந்து மெல்லியற்குப்பூசினாள்
அப்போதுமின்னிடையு மாரணங்குமேதுசொல்வாள்
ஏதடிகுறத்திநீ யென்மேல்விழுகிறாய்
மயங்குதலையாவானேன் மாதேவிழுவானேன்
அல்லகாண்பெண்ணே யாரணங்கேநீகேளாய்

அல்லியவள்கொலுவில் ஆண்டொளிவைப்பார்த்திருந்
நேற்றிரவுநித்திரை இல்லாததன்மையினல் [து
கண்ணேவுறக்குதுகாண் கட்டழகியெந்தனுக்கு
நித்திரைவருகுதடி நினைவைக்குலைக்குதென்ருள்
ஸ்நானங்களாட்டிவைத்தார் தாயக்கருங்குழலை
நீர்காட்டிவூதியே நிலங்கிள்ளிக்காப்புமிட்டு
ஈரமுலர்த்தி இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுகில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி
அரண்மனைக்குள்ளாக அழைத்துவந்தாளாரணங்கு
வட்டமணைமேலே மாதரைத்தானிருத்தி

குறத்தி மின்னொளியாட்கு ஆபரணமணிந்தது

சம்பங்கியெண்ணைகொண்டு தடவிச்சிணுக்கறுத்து
வாரிமுடித்து மாணிக்கக்கொண்டையிட்டாள்
சீவிமுடித்து சிமில்போலேகொண்டையிட்டாள்
ஒவ்வொருமயிருக்கு ஒவ்வொரு பூவிதழாம்
பொன்னிதழும்பூவிதழும் பூட்டியலங்கரித்து
கொண்டைக்குத்தண்டைகளும் கொண்டைதாங்கிமாலை
சந்திரபிறைசூரியபிறை தரித்தாளேநெற்றியிலே [களும்
நெற்றியிற்சுட்டுகட்டி நேர்விழிக்குமையெழுதி
நடுநெற்றியில்நாமமிட்டு நற்சாந்துபொட்டுமிட்டு
ஒட்டுக்கடுக்கனும் இணைசேர்ந்த நாகடகம்
அன்னகொப்புபின்னேவாளி அழகுமிகுஞ்சவுளி
பச்சைக்கல்முருகுப் பதித்திருந்தவாளிகளும்
நாய்க்கரைதன்னில் நடுக்கழுத்தில்பூஷணமும்
ஒற்றைச்சரடுகளும் ஒருபுறமும்பொற்சரிகை
இரட்டைச்சரடுகளும் இருபுறமும்பொன்சரிகை
முத்துச்சரப்பளியும் மோகனமாலைகளும்
சந்திரகாசசரப்பளியாம் தாயித்தைப்பூஷணமும்
உத்திரசஞ்சமது உத்தமற்குபோடலுற்ருள்
தோள்வாங்கிக்கைவாங்கித் தேன்மொழிக்குச்சாற்றி
கடகஞ்சரிபவழம் கைநிறைந்தமோதிரங்கள்
மூக்குத்திகிந்தாக்கு முன்கைமூகதாரி
ஐந்துவிரலுக்கும் அழகானமோதிரமும்
பத்துவிரலுக்கும் பதிந்தகணையாழி
அரைக்கிசைந்தஒட்டியாணம் அழகுபெறச்சாற்றினுள்

தண்டைகொலுசுஞ் சதங்கையும்பாடகமும்
காலாழிகல்லணையும் பீலாழிபில்லணையும்
தேர்ப்பீலிமீன்பீலி தரித்தாளா ந்தேன்மொழிக்கு
அஷ்டாபரணம் அலங்காரஞ்செய்தாளே
சரிகைப்புடவையைத் தரித்தாளேமங்கையற்கு
முத்துரவிக்கை முருகுழலிக்குத்தரித்தாள்
கண்ணாடிகொண்டுவாடி கட்டழகிதாதியென்றாள்
கண்ணாடிகொண்டுவந்து கட்டழகிகைகொடுத்தாள்
கண்ணாடிதானெடுத்து கட்டழகிகாட்டவந்தாய்
மின்னொளியாள்தானெழுந்து வெம்பிமிகத்ததும்பி
அன்றுமுதலிவ்வரையி லாரணங்குபார்த்ததில்லை
காண்டீபனுந்தானுமாய் கண்ணாடிபார்த்ததில்லை
அவ்வசனங்கேட்டு அருங்குறத்தியேதுசொல்வாள்
மன்னவனுருன்புருடன் வருகிறார்காண்மாளிகைக்குள்
சுபத்திரையாள்வீடுவிட்டு வாருண்டிமின்னொளியே
நாககன்னிவீடுவிட்டு வாருண்டிமின்னொளியே
போகவதிவீடுவிட்டு வாருண்டிமின்னொளியே
துரோபதையாள்வீடுவிட்டு வாருண்டிமின்னொளியே
அல்லியுடவீடுவிட்டு வாருண்டிமின்னொளியே
பவளக்கொடிமாது பத்தினியாள்வீடுவிட்டு
வாராண்டிமின்னொளியே மன்னனரை நாழிகையில்
அரனாரைப்பூசைபண்ணி அமுதுபொசித்தீரானல்
கால்நாழிகைகுள்ளே காளையருந்தான்வருவான்
என்மேலேயாணையாக வருவான்காண்மின்னொளியே
என்றுசொல்லிமின்னிடையும் எழுந்தங்கேஏதுசொல்வாள்
அத்தனைபோற்றியென்று அணைத்துமேதானிருந்து
அந்தமுறைசெய்யவல்ல அந்தணர்களோடிவந்து

### மின்னொளி பூசை செய்கிறது

செம்பொன்குடத்தில் திருமஞ்சனங்கொண்டுவந்தாள்
செபமதுதிறந்து சிவனாரைப்பூசைபண்ணி
எண்ணெயபிஷேகம் ஏந்திழையாள்தான்செய்து
பாலாலபிஷேகம் பத்தினியாள்தான்செய்து
பொன்னுமலரெடுத்து பித்தரையும்பூசைபண்ணி
சந்தனவாசனையைச் சாத்தினாள்தையலரும்
கட்டிலேபோசனமுந் தாளியிலேபால்பழமும்

அரனர்சிவபூசை ஆரணங்குதான்முடித்தாள்
அறிவுடை நாயகற்கு ஆகார ந்தான்கொடுத்து
சிவனுரைப்பூசைபண்ணி செபத்தினையுள்ளடக்கி
அரனாரமர்ந்தபெட்டி ஆரணங்குதான்பூட்டி
சுத்தமுடன்மின்னொளியுஞ் செவியிலேபூச்சொருகி

### மின்னொளியுங் குறத்தியும் போசனமுண்ணுதல்

அமுதுண்ணும்மண்டபத்திலாரணங்குதான்சேர்ந்தாள்
போசனங்கொண்டுவா பொற்கொடியேயுண்ணவென்று
தாதிமாரோடியே தளிகையதுகொண்டுவந்தார் [ள்
தையல்குறத்தியற்குத் தலைவாழையிலைபோட்டு
மின்னொளியாள்முன்னாலே முக்காலியிட்டார்கள்
பொற்கலத்தைமுன்னேவைத்து போசனம்பாலித்தார்
பத்துவிதக்கறியும் பதினெட்டுபச்சடியும்
நல்லபொரிக்கறிகள் இராஜாக்கள்போசனமும்
பொரித்தபொரிக்கறியும் இராஜாக்கள்போசனமும்
பச்சென்றகீரையும் பவழம்போல்நற்கரியும்
அடவியில்தொவையல்களும் அழகானபச்சடியும்
துவையல்குழம்புகளும் சீராய்ப்படைத்தார்கள்
புத்துருக்குநெய்வார்த்து போசனமுண்ணுமென்றார்
மாதுகுறத்தியவள் மலைக்குறத்தியேதுசொல்வாள்
ஒக்கவேயுண்பதற்குப் பொருந்தாதேவுத்தமியே
விளங்கியசீர்மாதவத்துமின்னிடையாளேதுசொல்வாள்
குறமாதுடனுகக் கூடவேவுண்பாரோ [ம்
ஏசாரோயென்னையிந்த இனத்திலுள்ளபெண்களெல்லா
சோரவளநங்கையவள் சுபத்திரையாள்கேட்டாக்கால்
தூற்றியேகாற்றில்வைத்துச் சொல்வார்பலருடனே
என்னுடைத்தகுலமெல்லாம் இழிகுலத்தில்தள்ளிடுவார்
சற்றுமதியார்கள் தரணியிலுள்ளவர்கள்
என்னுணைகட்டுவச்சி யென்பேரில்தயவுவைத்து
உனக்குவந்தபோசனத்தை உண்ணடிமாதேயென்றாள்
பார்த்தனெனுங்கட்டுவச்சிபைங்கொடியாளேதுசொல்
அல்லியற்கும்துரோபதைக்கும் அன்பாய்க்குறியுரைத்து [வாள்
இன்பக்குறியுரைத்து இருவருமுண்ணலையோ
அவர்களைப்பார்க்கிலும் அதிகமாயுன்சாதி
விஜயன்வருகிறதை மெல்லியரேபார்ப்போமடி

அருச்சுனன்வருகிறதை அறிவோமடிமின்னொளியே
நீ-வாழ்கிறதைபார்ப்போமடி மாதுகன்னிமின்னிடை
கூடவுண்டாலல்லாது கொம்பனேயேநான்போறேன் [யே
என்று-கூடையெடுத்துமவள்கொம்பனையாள்தானெழுந்
விளங்கியசீர்மாதவத்து மின்னிடையாளேதுசொல்வாள் [து
உன்னைவெறுக்கக் கணக்கில்லைவுத்தமியே
பார்த்தனவருச்சுனனுர் பண்ணிவைத்ததோஷமிது
கொண்டவற்கெளிதானுல் கண்டவற்கெளிதாகும்
எவரைநாடிபோவேனடி என்றலைவிதிப்படிகாண்
பார்த்தனெனைத்தள்ளிவைத்த படியல்லோகுறத்தியரே
உனக்குமெளிதாச்சோ வுகமுடியுங்காலமாமோ

மின்னெளியும் குறத்தியும் ஒருகலத்திலுண்டது

கூடவேயுண்பதற்கு கொம்பனையேவாருமென்ருள்
தலையிலெழுத்தையடி தள்ளிவைக்கக்கூடாது
ஒக்கவேவுண்டிடுவோம் உத்தமியேவாருமென்ருள்
அப்போதுகுறத்தியவ ளதிகப்பிரியமுடன்
சந்தோஷமாகவந்தால் தாமக்குழலாளும்
அமுதுண்ணுமண்டபத்தில் இருவருமாய்போய்புகுந்
ஒருகலத்தில்போசனங்க ளுண்டாரிருவருமாய் [தார்
கூட்டிப்பிசைந்துக் குறத்திய நமூட்டினுள்
பாதியடிசில் பகிர்ந்துண்டாள்கட்டுவச்சி
போசனமுண்டு பொடியிட்டுக்கைதிமிரி
காலோடுகையும் கனிவாயுஞ்சுத்திசெய்து
வைத்தமெரிவடியைத் தொட்டுநடந்தசைந்து
வட்டமணேமேலே வந்தமர்ந்தாரிருவமாய் [தாள்
அடைக்காயும்வெற்றிலையும் அருந்ததிமுன்னேவைத்
வாசமிலையெடுத்து மலைக்குறத்தியற்களித்தாள்
கட்டுவச்சிவாங்கியே மண்ணேடேதானணைந்தாள்
கம்மாறுவெற்றிலையும் களிப்புள்ளதுவர்பாக்கும்
இந்தாருமென்று இளங்குறத்திதான்கொடுத்தாள்
மன்னனருச்சுனனுர் வாள்விஜயனென்கணவர்
வந்தாலொழிய மலைக்குறத்திநாயகமே
அங்கேயிருந்து அடைக்காய்கள்தின்னுவது
கட்டுவச்சிநாயகமே அடைக்காய்கள்நான்வேண்டேன்
பார்த்திபரில்லாமல் பரிமளங்கள்நான்தீண்டேன்

என்னுணைகட்டுவச்சி யெந்தனுக்குவேண்டாமென்றாள்
என்றுமவள்சொல்ல யிவளுரைப்பாள்கட்டுவச்சு
மன்னரிதோவாரூர் வாழ்வுனக்குண்டாச்சு
அறுமுகவர்தன்னுணை அம்மைவள்ளிதன்னுணை
அருச்சுனனுருன்கணவன் அரைநொடியில்வாருன்கா
பள்ளியறைக்குப் பைங்கிளியேபோமென்றார் [ண்
மின்னொளியுங்கட்டுவச்சி மிகவெழுந்துகைபிடித்து
பள்ளியறைவாசற்படிக் கதவையேதான்திறந்து
ஒருத்தமஞ்சபஞ்சணை ஒளிவழகைத்தான்பார்த்து
சுத்தியெங்குந்தான்பார்த்து துன்னிலம்பூகண்ணாலே
பார்த்தாள்குறத்தியரும் பங்கயஞ்சீர்கண்ணாலே
மின்னொளியேபெண்மயிலே விஜயனுர்வருவாரோ
பார்த்தர்வருவாரோ பஞ்சணைசோடிப்பில்
பின்னையுமுண்டோடி பக்குவங்கள்மின்னொளியே
பள்ளியறையுந்தனுக்குப் பார்க்கசமைந்ததோடி
தச்சன்சமைந்தானே தானேசமைத்துதோ
எப்போதுமுண்டோடி யின்றுபுதிதோதான்
சிறையிலிருந்தேனென்று தேன்மொழியேசொன்னீரே
அடைக்காயருந்தேனென்றாய் ஆபரணம்பூணேனென்
மைபொட்டிடுவதில்லை மஞ்சள்குளிப்பதில்லை [றாய்
பாரச்சிறையில்வைத்தார் பார்த்தனென்றுசொன்னீரே
மெய்யென்றிருந்தேனே மின்னொளிநாயகமே
சூதுகளுமுண்டோடி சோழன்மகளாரே
ஆரணங்கேமின்னொளியே அறியவுரையுமென்றார்
இவ்வார்த்தைதான்கேட்டே துரைப்பாள்மின்னொளியும்
கானக்குறத்தியரே கட்டுவச்சிநாயகமே
ஆறுமொருவரில்லை ஆள்வரவுந்தானுமில்லை
சுந்தரப்பூதாதிமார் சொற்பேச்சுங்கேளார்கள்
என்பேச்சுங்கேளார்க ளீடழிக்குந்தாதியர்கள்
தங்களிடபேச்சினுல் தான்செய்வார்தாதியர்கள்
இருந்தசிறைகாணுமல் இவர்கள்செய்யக்காரணமேன்
என்னசெய்வேனென்று எரிபறந்துகண்சிவந்து
கட்டுவட்டத்தின் கயிறுருவிவிட்டாற்போற்
தீரமொடுங்கி யிருவிழியில்முத்துதிர்த்தாள்
முத்துப்போற்கண்ணீரை முகமெல்லாஞ்சோரவிட்டாள்
சோழன்மகளாருஞ் சோர்ந்துமனந்தளர்ந்து

ஆருதகோபம் அனலாகநிற்கையிலே
தாமக்குழலாள் தாதியவள்கூறுவாள்
வந்தார்விஜயனென்று மலைகுறத்திசொன்னளே
மணவாளனிப்போ வருவாரென்றுசொன்னளே
மெய்யென்று நம்பியே மின்னொளியே ஆச்சியே
சோடித்தலங்கரித்தோம் சுந்தரியேபஞ்சணைகள்
எங்கள்மேற்கோபமுண்டு இந்தபிழைகாருமென்று
தாதியர்களெல்லோருந் தான்ருழுதுதெண்டனிட்டார்
இவ்வார்த்தைதான்கேட் டேதுரைப்பாள்கட்டுவச்சி

அருச்சுனன் அரைநாழியில் வருவானென்று
சொன்ன குறம்

(தின) வாடியடிமின்னொளியே வாழ்விஜயன்றேவி
உன்-மணவாளனரைநொடியில்வருவாண்டிபெண்ணே
கணவனிதோவுன்மனைக்குக் கால்நடையாய்வருவான்
கைபார்த்தேனுந்தனுக்குக் கண்டுகுறிசொன்னேன்
அஞ்சாதேமின்னொளியே அணைந்துவிளையாடி
அழகானகதிரவன்போல் பெண்பெறுவாய்பெண்ணே
சிந்தனைகள்தேவையில்லை சிறையுமீண்டுபோச்சு
திருச்சோழன்மகளேயென்று செங்கரத்தைப்பிடித்தாள்

வேறு

கானக்குறத்தியவள் கட்டுவச்சிகூறுவாள்
சொற்பொறுக்கப்போகாது சோழன்திருமகளே
வாழ்விஜயன்றேவியென்று வாழாதிருந்தாலும்
ஆண்காற்றுமயங்கிவர அஞ்சுமடிமின்னொளியே
கலியாணமுண்டல்லோ கன்னியரேயுந்தனுக்கு
கண்ணீர்பெருகிறதைக் கணவனர்வந்தாக்கால்
வாருன்மணவாளன் மதிமுகந்தான்பாருன்
வாடிமயிலேயென்று மலைக்குறத்திகைபிடித்து
கொங்கையின்மேலே குறத்தியுமுத்தமிட்டாள்
கானக்குறத்தியரே கட்டுவச்சிநாயகமே
அறியாதபாலகரை யணைக்குமடிமேலே
என்னைமையலாக்கி யென்னுடம்பைபுண்ணுக்கி
மாயமலைக்குறத்தி வந்துகுறியுரைத்தாய் [ய்
உன்னெச்சிற்கலந்தலவோ யெனக்கமுதுவூட்டிவைத்தா

கூடவுமுண்டாயே கோடறையில்வந்தாயே
மன்னவனுரென்கணவர் வருவாருமென்ருயே
பொய்யாச்சேயுன்குறிகள் பூங்குறத்தி நாயகமே
கானக்குறத்தியவள் கட்டுவச்சிதானெழுந்து
மின்னொளியைப்பார்த்து மெல்லியருங்கூறுவாள்

குறம்

(தின) வட்டமதிமுகத்தாளே மின்னொளியேகேளும்
வடிவுடையவுன்புருஷன் வந்தாண்டிவாசல்
கூர் நகங்கள்வைத்திருக கொங்கைதனைப்பிடித்து
கோவையிதழ்மின்னொளியே கோதியணைவாண்டி
குறத்தி நானருகிருந்தால் கோபம்வரும்பெண்ணே
குற நாற்றமருச்சுனற்கு குமட்டியடியாதோ
இங்கேயிருநானவரை அழைத்தோடிவருவேன்
என்றுசொல்லிகுறத்தியவ ளேகிநடந்தாளே
பெண்வடிவுதனைமறைத்து பணிதிகளைவாங்க
பொற்கூடைதனிலந்தப் போர்விஜயன்தானும்
அன்றுதித்தாளண்டையிலே போய்வாருமென்று
ஆகாயம்போகவென்றே அந்தரத்தேதட்ட
ஆகாயமாய்ப்பறந்து அந்தக்குறக்கூடை
அனலுதித்தாரண்டையிலே அமர்ந்ததுவக்கூடை

குறவேடம் நீங்கி அருச்சுனன் தன் சுயரூபத்துடன்
வந்து மின்னொளியாள் கண்ணை மூடினது

மின்னொளியாள்கண்மலரை விஜயனவர்மூடினர்
கண்மலரைமூடவே கன்னியவளேதுசொல்வாள்
கானக்குறமகளோ கட்டுவச்சிநாயகமோ
என்-பத்தாவருச்சுனரோ பாங்கியரேசொல்லுமென்ருள்
ஆரெனைக்கண்மறைத்தார் அச்சங்களில்லாமல்
தாதியவள்தான்பார்த்து தையலவளேதுசொல்வாள்
விஜயனர்தேவியரே மின்னொளி நாயகமே
ஆரென்று நீரும் அடையாளஞ்சொல்லுமென்ருர்
என்று-தாதியவளுரைக்கத் தானுரைப்பாள்மின்னொளி
கண்ணைமறைத்துக் கரத்தையவள்பிடித்து [யாள்
மூந்நூறுக்காதவழி மூழக்கமுள்ளபந்தலிலே
முத்திழைத்தபந்தலிலே முடுகிவந்துமாலையிட்டு

சுண்டுவிரல்பிடித்த சுந்தரனுரென்றுரைத்தார்
காண்டாவனமெரித்த கட்டழகாகைவிடுங்காண்
மன்னர்மயங்கி மலர்விழியில்கைவாங்கி
கானக்குறத்தியாய்க் கைபார்த்தகட்டுவச்சி
அந்தக்குறத்தி யழகைநான்பார்க்கவேணும்
வேடக்குறத்தியரை மின்னொளியுந்தான்பார்த்து
விஜயனல்லாச்சொல்ல மின்னொளியுந்தான்பார்த்து
பார்த்தாளேமின்னொளியும் பார்த்தன்வடிவழகை
விஜயரேவும்முடைய வேஷங்கலேந்தீரோ
பூட்டியவாபரணம் புதைத்துவைத்துவந்தீரோ [ம்
கொண்டையின்மேல்தொங்கலும் கோல்திரிபட்டுடையு
முத்தைப்போற்பல்லொளியும் முருக்கிதழ்போல்செவ்வா
ஒட்டியசந்தனமும் உலவியகண்மலரும் [யும்
சந்தனபொட்டழகும் சதிரானநெற்றியும்
உரியுங்கனிப்பழமும் ஊர்வசிநாட்டமும்
கொச்சக்குறக்கூடை குறமகளின்தன்னழகும்
உம்மிட-மாயஸ்தனபாரம் மறைத்துவைத்துவந்தீரோ
மைபோட்டுதான்கலேக்க மதிகெட்டுப்போனீரோ
நீதானெழுந்திருந்து நீக்கியிவ்வடிவாகி
ஆறுமறியாமல் அங்கொருவர்காணுமல்
கோலமறைத்தீர் குறமுரைத்தீர்கொற்றவரே
இக்கோலங்கொண்டென்னே யீடழிக்கவந்தீரோ
இத்தனேகால மிருந்தேன்சிறையாக
மைத்துனன்முன்னேதான் வாழாமல்வைத்தீரோ
என்-சக்களத்திமுன்னே சதிபிழைசெய்தீரோ
இப்போ-வந்திங்கேபோக மனதாச்சோமன்னவரே
உம்முடையதேவிமார் உரைக்கவும்வந்தீரோ
நீரேதான்வந்தீரோ நிலவரத்தைச்சொல்லுமென்றுள்
மின்னொளியாள்தான்கேட்க விஜயனவனேதுசொல்வா
மெய்யாகச்சொல்லுகிறேன் மெல்லியரேநீர்கேளும் [ன்
மாயனிடதங்கையரே மனதில்நினேயாதே
நாகமடந்தை நன்னுதலேச்சொல்லாதே
ஆணலழக னருச்சுனர்தானுரைக்க
வாருமென்றுசொல்லி மணிக்கடகங்கைபிடித்தாள்
செம்பொன்கதவடைத்துச் சிக்கெனவேதாள்பூட்டி
தேவியருந்தானுமாய் சேர்ந்ததிருவணேயில்

வெற்றிலைதின்று விரும்பிவிளையாடி
ஒருவற்கொருவ ருகந்துவிளையாடி
பலகாலுமிவருடனே பழகியிருந்தாப்போல்
தழுவாதுபோலே தழுவிவிளையாடி
மாலைமுடியாமல் மடிமேலேகொண்டிருந்தார்
சந்தோஷமாகவே தனஞ்செயனும்மின்னொளியும்
செங்கோற்செலுத்தி சீரரசையாண்டிருந்தார்
விளங்கியசீர்மாதவத்து மின்னொளியாள்தன்கதையை
எழுதிப்படித்தவர்கள் இந்திரனைப்போல்வாழ்வார்
காளைகுறங்கற்றோர்கள் காசினியில்வாழ்ந்திடுவார்
கன்னியர்கள்கேட்டால் கடுகமணம்பெறுவார்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்ற முசியாமல்வாழ்ந்திருப்பார்
இக்கதைகேட்டவர்கள் ஈன்றிடுவார்புத்திரனை
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்வரனார்.

மின்னொளியாள் குறம் - முற்றிற்று.

---

திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை:—1952.